Regd. No. M. 4392

ரயிலிலிருந்து சாமான்களை எடுத்து வரவோ வெளியூர்களுக்கு சாமான்களை அனுப்பவோ நீங்கள் சிரமப்பட வேண்டாம். விவரங்களுக்கு எழுதுங்கள்

# ஸ்ரீராம விலாஸ் சர்வீஸ் லிமிடெட்






மதராஸ் & தென் மராட்டா ரயில்வேக்கு லோகல் டெலிவரி கண்ட்ராக்டர்கள்

202-3, மவுண்டு ரோடு (போன்:-8536) மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# தாயின் சந்தோஷம்





என் குழந்தையின் ஈரல் குலைகட்டி வியாதி சொஸ்துப் படுத்த முடியாதளவு முற்றி யிருக்கிறது என்றும், குணப் படுவது கஷ்ட மென்றும், எல்லோராலும் கருதப்பட் டது. ஆனால் ஜம்மியின் லிவர் க்யூரினால் என் குழந் தை காப்பாற்றப்பட்டதிற்கு அவருக்கு என் மனமார்ந்த வந்தனம். ஈரல் குலைகட்டி க்கு தாமதிக்காமல்

## ஜம்மியின் லிவர் க்யூர்

## உபயோகியுங்கள்.

ஜம்மி வேங்கடரமணய்யா அண்டு சன்ஸ்,
மைலாப்பூர் — மதராஸ்.
சப் ஆபீஸ்: கும்பகோணம்.
பிராஞ்சுகள்: கல்கத்தா, லக்னோ, பம்பாய்,
பெங்களூர், திருச்சிராப்பள்ளி, விஜயநகரம்.

## 4 Shades Whiter in 4 Weeks



### சாஸ்திரீய முறை கருத்த மேனியை வெண்மையாகவும், அப்பழுக்கற்ற தாகவும் மாற்றுகிறது

அதிசயிக்கத் தக்க தங்கள் முகப் பொலிவு, சாஸ்திரீயமாக வெண்மை யளிக்கும் "ப்ளாரோஸோன்" உதவி யினால் அழகிய மேனியைப் பெற்று அதன் விளைவாகத் தங்களுக்குக் கிட்டும் ஓர் பரிசு. இது வருஷக் கணக்கான ஆராய்ச்சியின் பலன். இதில் அமோச னாக்ஸிலுடன் கூடிய ஓஸோன் என்னும் முக்கிய சத்து இருக்கிறது. இந்த சரக்குகள் சருமத்தினுள் வெகு தூரம் சென்று, கருத்த ரோமத் துவாரங்களை வெண்மையுறச் செய்து, சருமத்திற் குப் போஷாக்களித்து, பருக்களை அகற்றி, இதர சருமக் கோளாறுகளை யும் நீக்க உதவுகிறது. "ப்ளாரோ ஸோன்" உபயோகிப்பது மிக சுலபம். முற்றிலும் தீங்கற்றது. ஒரு பாட்டில் வாங்குங்கள். விரைவில் உங்கள் முகப் பொலிவைக் கண்டு நீங்களே அதி சயிப்பீர்கள். முழு சிகிச்சை (ஒரு பாட்டில்) ரூ. 4/-

"ப்ளாரோஸோன்" தற்போது கான்ஸென்ட்ரேடட் க்ரீமாக ஜாடி ஒன்று ரூ. 5/4-க்கு கிடைக்கும்.



எங்கும் கிடைக்கும்.

ப்ளோசி லிட்., த. பெ. 875, பம்பாய்.
சென்னை ராஜதானி டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
ஸவுத் இந்தியா ஏஜன்ஸீஸ், 117,
அரமனைக்காரத் தெரு, ஜி. டி. சென்னை.

# எப்பொழுதும் நீ அவனை கவனித்துக்கொண்டிருக்க முடியாது!

## —ஆனால் நீ அவனை 'அழுக்கு அபாய'த்திலிருந்து காப்பாற்றலாம்

அவன் கடை வீதியிலோ, அல்லது ஏரிக் கரையின் மீதோ விளையாடிக் கொண்டோ, அல்லது பந்தாட்டத்தில் புரண்டு கொண்டோ இருக்கலாம். அவன் எங்கு இருந்தபோதிலும் அழுக்கடைகிறான் என்று நிச்சயமாகத் தெரியும். நீங்கள் அவனுக்குப் போதித்திருக்கும் லைப்பாய் பழக்கமானது ஒரு வரம் போன்றதாகிறது. அழுக்கு அவனை ஒன்றும் செய்ய முடியாதென்று உங்களுக்குத் தெரியும். அடிக்கடி லைப்பாயால் சுத்தி செய்து குழந்தைகளை 'அழுக்கு அபாய'த்திலிருந்து காப்பாற்றுவது எவ்வளவு நல்லது. ஏனென்றால் இந்த ஆபத்து எல்லா இடத்திலும் இருக்கிறது. கிருமிகளானது அழுக்கில் உண்டாகி வியாதியைப் பரவச் செய்கிறது. ஆனால் லைப்பாய் கிருமி நாசக சோப். ஆரோக்ய சாதனத்திற்கான ஓர் அபூர்வத் தன்மை கொண்டுள்ள சோப் இந்தியாவில் இது ஒன்றுதான். ஆகையால்தான் அது உலகப்பிரசித்தி பெற்றது.



**லைப்பாய்** நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது அது ஒரு நல்வழக்கம்

L. 53-50 TM LEVER BROTHERS (INDIA) LIMITED

# திருப்தி, அமைதி



ஒரு கப் டீ அருந்தியவுடன்.
கேட்பானேன், நரஸூஸ் டீ
தான்! நல்ல காபி, டீயை
அனுபவிக்க அறிந்தவர்கள்
நரஸூஸ் காபி, டீயையே
விரும்புகிறார்கள்.
நரஸூஸ்
இந்தியத்தயாரிப்பில் தலைசிறந்தது
சேலம் தென்னிந்தியா



## அது மிகவும் குளிர்ச்சியாக இருக்கிறதல்லவா!

## . . . ஆம். களைப்பையும் போக்குகிறது!

## . . . அதுமட்டுமா—ஆனந்தத்தையும் அளிக்கிறது!

தினசரி வினோலியா சோப்பை உபயோகித்து சுகத்தை விரும்பும் மனிதர்களைக் கேளுங்கள். அவர்கள் இது மிகவும் ஆச்சரியமாக சுகமளிக்கும் என்றும், கோடைகாலத்தில் ஓர் சிறந்த வரம் போன்றதென்றும் சொல்லுவார்கள். அதனுடைய வெண்மையான நுரை குளிர்ச்சியையும், மலர்ச்சியையும் கொடுக்கிறது. அதனுடைய பிரத்தியேகமான வாசனை குதூகலத்தை அளிக்கிறது. மிகவும் களைப்படைந்த நரம்புகளுக்கு உத்சாகத்தை ஊட்டுகிறது.




# வினோலியா
# ஒயிட் ரோஸ் ஸோப்பு

VWR. 18-50 TM

VINOLIA CO., LIMITED, LONDON, ENGLAND

# கஷ்ட காலம்

## எம். எஸ். வி.

★

ஒரு குழந்தையின் கழுத்திலிருந்த தங்கச் சங்கிலியைக் களவாடி விட்டு போலீஸின் கண்ணுக்குத் தெரியாமல் தப்பித் திரிந்து கொண்டிருந்தான் மாசிசாமி.

மாசிசாமிக்கு இம்மாதிரியான தொழில் புதிதல்ல. நல்ல அனுபவம் பெற்றவன் தான். அதற்கு அத்தாட்சியாகவே அவ னுடைய போட்டோ போலீஸ் ஸ்டேஷனில் மாட்டப்பட்டிருந்தது.

குழந்தையின் சங்கிலி களவு போனதும் போலீஸார் மாசிசாமியின் போட்டோவை எடுத்துக் கொண்டு அவனைப்பற்றித் தீவிர மாகப் புலன் விசாரித்துக் கொண்டிருந் தார்கள். மாசிசாமியை செண்ட்ரல் ஸ்டேஷ னில் பார்த்ததாகத் தகவல் கிடைத்ததும், ஒரு போலீஸ்காரன் மாசிசாமியைத் தேடிப் புறப்பட்டான். அப்போதுதான் ரயில் ஏறின மாசிசாமி கூட்டமான ஒரு இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டான். என்றாலும் மனம் நிம்மதி அடையவில்லை. யாராவது பார்த்து விடுவார்களோ, எவனாவது சொல்லி விடு வானோ என்று மார்பு படபடவென்று அடித்துக்கொண்டே இருந்தது. எதற்கும் தன் உடையை களைந்து விட்டு வேறு ஆடை போட்டுக் கொள்வது என்று தீர்மானித்தான்.

பக்கத்தில் தூங்கிக் கொண்டிருந்தான் ஓர் ஆசாமி. அவன் தலைமாட்டில் இருந்த துணி மூட்டையை மாசிசாமி மெதுவாக எடுத்துப் பிரித்து உடுத்திக் கொண்டு வேறு வண்டியில் போய் உட்கார்ந்து கொண்டான். வண்டி அரக்கோணம் தாண்டி விருக்கும். மூது கை யாரோ பலமாகத் தட்டினார்கள். விழித்துப் பார்த்தால் ஒரு போலீஸ்காரன் நின்றுகொண்டிருந்தான். "நீதானே நல்ல முத்து?" என்று கேட்டான் போலீஸ்காரன். மாசிசாமி பேந்தப் பேந்த விழித்துக் கொண்டே, "நான்......நான்......நல்லமுத்து இல்லே......" என்றான்.

"இதோ, உன் உடை சொல்லுதப்பா! பல நாள் திருடனுச்சே நீ!" என்றான் போலீஸ் காரன். மாசிசாமி, தன்னுடைய உடையில் இருந்தால் ஆபத்து என்று வேறொருவ னுடைய உடையை மாட்டிக்கொண்டா னல்லவா? அதுவே அவனுக்கு ஆபத்தாய்ப் போய்விட்டது. ஏனெனில், அந்த வேறொரு வன்தான் நல்லமுத்து என்கிற பழைய கேடி. அவனைத் தேடிப் பல நாள் போலீஸார் அலைந்து கொண்டிருந்தார்கள். மாசிசாமி அவன் உடையை மாட்டிக் கொண்டிருந் ததைக் கண்டதும் போலீஸார் மாசிசாமியை நல்லமுத்து என்று எண்ணிப் பிடித்து விட்டனர்!



"தேவலேயடி நீ அடிக்கிற கூத்து. அரைப் புட்டி மண்ணெண்ணெய் வாங்கிறதுக் குள்ளே பிராணன் போயிட்டு வரேங்கிறது. நீ என்னடான்னு பகலெல்லாம் 'லாந்தலை' ஏத்தி வைச்சிருக்கயே!"

"என் ஒன்றுமில்லாததுக் கெல்லாம் இப்படி ஆர்ப்பாட்டம் பண்றேள். தீக்குச்சி இருக்குமோ என்னமோ...." —

"என் ஒன்றுமில்லாத்துக் கெல்லாம் இப்படி ஆர்ப்பாட்டம் பண்றேள். தீக்குதான் நெருப்புப் பெட்டி கிடைக்கிறது குதிரைக் கொம்பா இருக்குன்னேனே. தினம் ஒரு குச்சி கிழிப்பானேன்னு அணைக்காம வைச்சிருக் கேன். இதுக்கு என்னமோ பிரமாதப் படுத்தறேளே!"

"சரி, அதே மாதிரி இந்த முட்டாள்களை அடக்க நாம் இதே யோசனையைப் பின் பற்றுவதில் என்ன தப்பு இருக்கிறது?"

விசு சொல்வதில் உண்மையிருக்கிறது என்பது எனக்கு அப்பொழுது தான் புலப்பட்டது. உடனே இருவருமாய் உட்கார்ந்து கடிதம் ஒன்றைத் தயார் செய்தோம்.

"சில புத்தியில்லா மனிதர்கள் மௌன குருவின் பெயரைச் சொல்லிக் கொண்டு தாங்கள் எழுதி யனுப்பும் கடிதத்தைப் போலவே ஒன்பது கடிதங்கள் எழுதி ஒன்பது பேருக்கு அனுப்ப வேண்டுமென்றும், அப்படி எழுதி அனுப்பா விட்டால் அவர்களுக்கு கஷ்ட நிஷ்டூரங்கள் உண்டாகும் என்றும் ஜனங்களைப் பயமுறுத்துகிறார்கள். நீங்கள் ஒருவரும் அம்முட்டாள்களின் பட்டி மிரட்டல்களை லட்சியம் செய்யாதீர்கள். அவர்கள் சொல்வதுபோல் செய்யாவிட்டால் உங்களுக்கு ஒன்றும் வராது. ஆகவே உடனே இதே மாதிரி ஒன்பது கடிதங்கள் எழுதி உங்கள் நண்பர்கள் ஒன்பது பேருக்கு அனுப்பி எங்களுடன் ஒத்துழையுங்கள்."

இம்மாதிரியே ஒன்பது கடிதங்கள் எழுதி அனுப்பி விட்டோம்.



யுக்தி

தகப்பனார் (பையனைப் பார்த்து):—புதுசா வாங்கித் தந்த குடையில் எதற்காகப் பெரிதாய்க் கத்தரித்திருக்கிறாய்?

பையன்:—மழை வந்தால் நின்று விட்டதா என்று பார்ப்பதற்காகத் தான் அப்பா!

ஒருநாள் காலை பதினொரு மணியிருக்கும். விசு பரபரவென்று ஓடி வந்தான்.

"டேய், பார்த்தாயடா. நாமெழுதியது போலவே நமக்கே ஒரு கடிதத்தை ஒருத்தன் அனுப்பி யிருக்கிறான். இதற்கென்னடா செய்வது?" என்றான்.

"என்ன செய்வதாவது? கடிதத்தில் எழுதி யிருப்பதுபோல் ஒன்பது எழுதி யனுப்புவது."

உடனே விசு ஒன்பது எழுதியனுப்பி விட்டான். மறுநாள், என்ன ஆச்சரியம்! என் பேருக்கு அதேமாதிரி மூன்று கார்டுகள் வந்தன. விசுதான் அனுப்பி விட்டானோ என்று எனக்குச் சந்தேகமாய் விட்டது. அவனிடம்போய், "ஏண்டா, நீயா எனக்கு மூன்று கார்டுகள் அனுப்பினாய்?" என்றேன்.

"ஐயையோ, இல்லையே, சரி. என்ன பண்ணுகிறது? இரண்டு பேருமாய்ச் சேர்ந்து எழுதுவோமென்று அவன் சொல்ல இருவருமாய்ச் சேர்ந்து இருபத்தேழு 'காபி'கள் தயார் செய்தோம். இவைகளைப் 'போஸ்ட்' செய்வதற்குள் வேறு எட்டு கார்டுகள் வந்து விட்டன. முன் வைத்த காலைப் பின் வைப்பது அவ்வளவு உசிதமாக இருவருக்கும் படவில்லை. வந்தது வரட்டுமென்று எழுபத்திரண்டு 'காபி'கள் தயார் செய்து அனுப்பினோம். பிறகு நாளொன்றுக்குப் பத்துப் பதினைந்து கார்டுகள் வர ஆரம்பித்து விட்டன.

எங்களுக்குப் போதும் போதுமென்றாய் விட்டது. முதற் கடிதத்தை ஆரம்பித்தவர்களே முதற் கடிதத்திற்கு விரோதமாய் இரண்டாவது கடிதம் ஆரம்பித்தது நாங்கள்தான் என்று அறிந்து எங்களுக்குப் புத்தி கற்பிக்கிறார்களோ என்று எனக்குத் தோன்றி விட்டது. வீட்டிலே அம்மாவும், "இந்தக் கார்டுகளுக்கெல்லாம் பதில் எழுதுவதற்குப் பதிலாக என் தங்கை உமாவின் ஜாதகக் 'காபி'யை எடுத்துப் போட்டாலாவது உபயோகப்படுமே" என்றான்.

அம்மா சொல்வதும் நியாயமாகத் தான் பட்டது. அன்றிலிருந்து கடிதங்கள் அனுப்புவதை நிறுத்தி விட்டோம்.

நான் இப்பொழுது இந்தக் கட்டுரையை எழுதியதும் உங்களுடைய நன்மைக்காகத்தான். இனிமேல் மௌன குருவின் பெயரைச் சொல்லியோ, இல்லை அதற்கு விரோதமாகவோ என்ன கடிதம் வந்தாலும் லட்சியம் செய்யாதீர்கள். அவ்வளவுதான் நான் சொல்லலாம். அப்புறம் உங்களிஷ்டம்!

# மௌன குரு

பாரு

"ஸார், போஸ்ட்!" என்ற குரல் கேட்டு விழுந்தடித்துக்கொண்டு ஓடினேன். தபால்காரன் ஒரு கார்டைக் கொடுத்து விட்டுப் போய் விட்டான். கார்டு என் பேருக்குத்தான் வந்திருந்தது. யார் எழுதியிருக்கிறார்கள் என்று பார்த்தேன். அதில் பேரா ஊரா ஒன்றுமே காணோம். கையெழுத்தும் எனக்குத் தெரிந்ததாகத் தெரியவில்லை. சரி, கார்டில் என்னதான் எழுதியிருக்கிறது பார்க்கலாம் என்று பார்த்தேன்.

"ஸ்ரீ மௌன குருவின் அருள் என்றென்றும் உன் பேரிலும் உன் குடும்பத்தின் பேரிலும் இருக்க வேண்டுமானால் இந்தக் கடிதம் கண்ட உடனே இதே மாதிரி ஒன்பது கடிதங்கள் எழுதிக் கையெழுத்திடாமல் உனது சினேகிதர்கள் ஒன்பது பேருக்கு அனுப்பு. இப்படிச் செய்தாயானால் மௌன குருவின் அனுக்கிரகத்தால் செல்வமும் சகல சௌபாக்கியமும் உன்னை வந்து சேரும். அப்படிச் செய்யத் தவறினால் மன வருத்தமும் கஷ்டமும் ஏற்படும். ஆகையால் தாமதிக்காதே."

இந்த மாதிரி கடிதங்களைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இம்மாதிரி ஒன்று எனக்கே வரும் என்று நான் சொப்பனத்திலும் நினைக்கவில்லை. ஆகவே இந்தக் கடிதத்தைக் கண்டதும் என்ன செய்வதென்றறியாமல் என் மனம் குழப்பமடைந்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. இதேமாதிரி ஒன்பது கடிதங்கள் எழுதியனுப்புவது சுத்தப் பைத்தியக்காரத்தனம் என்று எனக்குப் பட்டது.

எதற்கும் விசுவை ஒரு வார்த்தை கேட்கலாமென்று அவனிடம் சென்று விஷயத்தைச் சொன்னேன்.

அவன், "அடாடா, உனக்கும் ஒன்று வந்து விட்டதா? நேற்றுத்தான் என்னுடைய அத்திம்பேருக்கு ஒன்று வந்தது. அவர் மௌன குரு பக்தர். கடிதம் வந்த உடனே ஒன்பது எழுதியனுப்பி விட்டார். இன்று அவர் பேருக்கு அதே மாதிரி ஒன்பது கடிதங்கள் வந்திருக்கின்றன. அவர் பாவம் விழுந்து விழுந்து ஒன்பது 'காபி' எடுத்துக் கொண்டிருக்கிறார். நானும் ஆனமட்டும் சொல்லிப் பார்த்தேன். கேட்கிறவராயில்லை. மஹா பயங்கொள்ளி அவர். பள்ளிக்கூடத்திலே 'இம்பொஸிஷன்' எழுது என்று பசங்கள் உயிரை வாங்குவதற்கு மௌன குருவே கூலி கொடுக்கிறார் என்று விட்டு விட்டேன்" என்றான்.

"அது கிடக்கட்டுண்டா. இப்பொழுது நான் என்ன பண்ணுகிறது சொல்லு."

"என்ன பண்ணுகிறதாவது! எழுதாமலிருக்கிறது."

"சே, அது சரியில்லை. எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது."

"என்ன யோசனை? சொல்லு கேட்கலாம்."

"என்னவா? நாமிருவரும் சேர்ந்து இந்தமாதிரி அநாமதேயக் கடிதங்கள் எழுதுகிறவர்களுக்குப் புத்தி கற்பிக்க வேண்டியது. அதற்கு ஒரு வழி சொல்லு பார்ப்போம்."

"சரி சரி, வழி என்னவென்று எனக்குப் புரிந்து விட்டது. நாமிருவரும் சேர்ந்து இந்தமாதிரி வரும் அநாமதேயக் கடிதங்களை லட்சியம் செய்து பதில் போடாதீர்கள் என்று எழுதி எல்லோருக்கும் அனுப்ப வேண்டியது."

விசு சொல்லிய இவ்வழி எனக்குச் சுத்தமாய்ப் பிடிக்கவில்லை.

"என்னடா, சுத்தப் பைத்தியக்காரனாயிருக்கிறாயே. இப்படி நாம் செய்ய ஆரம்பித்தால் நமக்கும் அந்தக் கடிதங்களை முதலில் எழுத ஆரம்பித்த முட்டாள்களுக்கும் என்னடா வித்தியாசம்?" என்றேன்.

"அடே போடா, உனக்கு ஒன்றுமே புரியாது. இதோ பார், இந்த யுத்தம் நடக்கிறதே. அதை நேச தேசத்தினரா ஆரம்பித்தார்கள்?"

"இல்லை."

"பின்னே அவர்கள் ஏன் யுத்தத்தில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்?"

"ஏன்? யுத்தத்தை நிறுத்துவதற்காகத்தான்."

# அப்படியா சேதி?

பகீரதன்

★

"என்ன, ஸார்! ஏதாவது தலைவலி மருந்து இருக்குமோ?" என்று கேட்டுக் கொண்டே அந்தக் கடைக்குள் நுழைந்தார் ஒரு ஆசாமி.

"ஓ! இருக்கிறது. விலை நாலணாந்தான்."

உடனே நாலணாவைக் கொடுத்து மருந்தை வாங்கப் போன அந்த மனிதர், "ஐயய்ய! 'பரமானந்தா பாமா'? இது எனக்கு வேண்டாம்!" என்று திருப்பிக் கொடுத்து விட்டு, அடுத்த கடைக்குச் சென்றார்.

"ஐயா! தலைவலிக்கு நல்ல மருந்தாக ஏதாவது இருக்கிறதா?"

"என்ன ஸார்! 'இருக்கிறதா?' என்று கேட்கிறீர்களே?" என்று சொல்லிக்கொண்டே அந்தக் கடைக்காரனும், 'பரமானந்தா பாமை' எடுத்துக் கொடுக்க வந்தான். அதைக் கண்டதும், "இதென்ன, இதைத் தவிர வேறு மருந்தே கிடையாதா?" என்று வெறுப்புடன் சொல்லிக்கொண்டே வேறு கடைக்குச் சென்றார் அந்த ஆசாமி.

அந்தக் கடைக்காரன், "அதோ பாரும்!" என்று சொல்லி அங்கே சுவரில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு போர்டைக் காண்பித்தான். அந்தப் போர்டில், "பரமானந்தா பாம்! சர்வ தலைவலி நாசன்!" என்று எழுதியிருந்தது. அதைப் பார்த்தவுடனே வந்த மனிதருக்குத் தலைவலி அதிகமாகி விட்டது. "ஒரு கடையிலாவது அந்தப் பாழாய்ப் போன 'பாம்' இல்லாமலில்லையே!" என்று முணுமுணுத்துக் கொண்டே கடையை விட்டுக் கீழே இறங்க ஆரம்பித்தார்.

அதுவரை அவருடைய நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்த அந்தக் கடைக்காரன், "ஸார்! ஸார்!" என்று அந்த ஆசாமியைக் கூப்பிட்டு, "எல்லாத் தலைவலி 'பாம்'களுக்கும் மேலானது இந்த 'பரமானந்தா பாம்'தான் ஸார்!" என்று சொல்லி அந்த பாமைப் பற்றி பல பிரமுகர்கள் கொடுத்திருந்த நற்சாட்சிப் பத்திரங்களையெல்லாம் எடுத்துக் காண்பித்தான்.

வந்த மனிதர் அவைகளைக் கண்ணெடுத்துக் கூடப் பார்க்காமல் கடையை விட்டு நழுவ ஆரம்பித்தார்.

கடைக்காரனுக்குக் கோபம் வந்து விட்டது. "ஏன், ஸார்! நீங்கள் நிஜமாகவே தலைவலி மருந்து வாங்க வந்தீர்களா? இல்லை. கடையில் யாரும் இல்லாவிட்டால்............" என்று ஏதோ மேலே சொல்ல வாயெடுத்தான்.

"கோபித்துக் கொள்ளாதீர்கள். எனக்கு அசாத்தியமான தலைவலி. அதனால்தான் 'பரமானந்தா பாம்' வேண்டாம், வேறு ஏதாவது மருந்து கொடுங்கள் என்றேன். எனக்குத் தெரியாதா, அந்த மருந்தைப்பற்றி. நான்தான் அந்த 'பரமானந்தா பாமை'த் தயாரிக்கும் பரமானந்தம்" என்றார் அந்த மனிதர்.

# ஜாக்கிரதை!












இருந்தாலும் சரி — இவர்களுக்கு ஸ்திரீகளாகவே தென்படுவதில்லை.

இப்பொழுது யுத்தம் வந்தாலும் வந்தது, கல்லூரி மாணவிகளுக்கும் கல்தாதான், மற்ற எல்லாருக்கும் கல்தாதான்.

சென்னையில் உள்ள பஸ்களை இப்பொழுது இரண்டு விதமாகப் பிரிக்கலாம்—கரி பஸ்கள், பெட்ரோல் பஸ்கள்.

இந்தக் கரி பஸ்கள் இருக்கின்றனவே, இவற்றுக்கு இத்தனை பொருத்தமான பெயர் எப்படி ஏற்பட்டது என்று நாம் எல்லாரும் அதிசயிக்கத்தான் வேண்டும். தன் முகத்தில் கரியைப் பூசிக் கொண்டிருப்பது போதாது என்று, நல்ல சமயம் பார்த்து நம் முகத்திலும் கரியைப் பூசி விடும். திடு திப்பென்று, நட்ட நடு ரஸ்தாவில் சொல்லாமல், கொள்ளாமல் நின்றுவிடும். "வண்டி படகில் ஏறும், படகு வண்டியில் ஏறும்" என்ற பழைய வசனம் மறைந்துபோய், "பஸ் நம்மைத் தள்ளும், நாம் பஸ்ஸைத் தள்ளுவோம்" என்ற புது வசனம் ஏற்படுவதற்கே இந்தக் கரி பஸ்தான் காரணம்.

ஆகவே அவசர வேலை இல்லாதவர்கள், பஸ்ஸைத் தள்ளுவதின் மூலமாவது தேகாப்பியாசம் பெற விரும்புகிறவர்கள், முகத்தில் கரியைப் பூசிக் கொள்ள விரும்புகிறவர்கள், குளிர் காய விரும்புகிறவர்கள், ஆகிய இத்தகையவர்கள்தான் கரி பஸ்ஸில் செல்லலாம்.

இந்த பெட்ரோல் பஸ்கள் இருக்கின்றனவே, அவற்றில் பிரயாணம் செய்கிறவர்கள், அதிலும் நின்று கொண்டு பிரயாணம் செய்கிறவர்கள் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

இந்த பெட்ரோல் பஸ்கள் போன ஜன்மத்தில் ரஷ்யாவில் பிறந்தனவோ, என்னவோ எல்லாம் சமதர்மக் கொள்கையுடையனவாக இருக்கின்றன. பாதிப் பேர் உட்கார்ந்து, பாதிப் பேர் நிற்பது அவற்றுக்குப் பிடிப்பதே இல்லை. முடிந்த போதெல்லாம், அவை நின்று கொண்டிருப்பவர்களைப் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்கள் மடி மீது உட்கார்த்தி வைக்கப் பார்க்கின்றன.

என் கிரகசாரம், நான் இந்தப் பஸ்ஸில் தொத்திக் கொள்ளும்போதெல்லாம் கடைசியில், அதாவது ஸ்திரீகள் உட்கார்ந்திருக்கும் சீட்டுக்குப் பக்கத்தில் தான் நிற்பதற்கு இடம் கிடைக்கிறது. அப்பொழுது பிரயாணம் முழுவதும் எனக்குத் திகில்தான்! டிரைவர் சடாரென்று பிரேக் போட்டு பஸ்ஸை நிறுத்தும் போதும், ஒரு ரஸ்தாவிலிருந்து, இன்னொரு ரஸ்தாவுக்குச் சடாரென்று திருப்பும் பொழுதும், "ஐயோ, பக்கத்தில் உள்ள அந்த அம்மாள் மீது விழுந்து மானத்தைப் போக்கிக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே" என்று நடுங்கிக் கொண்டே போவேன்.

ஆனால் இந்த இரண்டு வித பஸ்களும் ஜனங்களை மணிக் கணக்காக பஸ் ஸ்டாண்டில் நிறுத்தி வைப்பதில் ஒன்றுக்கொன்று சளைக்காதவை. "பன்னிரண்டு நிமிஷங்களுக்கு ஒரு தடவை பஸ் வரும்" என்று இரண்டு வித பஸ்களிலும் எழுதி ஒட்டியிருக்கிறார்கள். ஆனால் அந்தப் பன்னிரண்டு நிமிஷம் என்பது எந்தக் கடிகாரத்தைக் கொண்டோ? ஒருவேளை "பன்னிரண்டு மணிக்கு ஒரு தடவை" என்பது தான் அச்சுப் பிழையினால் பன்னிரண்டு நிமிஷம் என்று ஆகிவிட்டதோ, என்னமோ!

ஆகக் கூடி, இந்தப் பஸ்களில் நாம் இடியும் குத்தும் படும்போதெல்லாம் யுத்த காலத்துக்கு முந்திய பஸ்கள் ஞாபகம் வந்துகொண்டே இருக்கிறது. ஜட்கா வண்டிக்காரர்கள், "யாரையா ஒரு ஆள், யாரையா ஒரு ஆள்" என்று ஆள் தேடியது போலவே பஸ்களும் ஒரு காலத்தில் தேடிக் கொண்டிருந்தன. பஸ்ஸில் 23 ஆள் என்று போட்டிருந்தால் 23 ஆட்களுக்கு மேல் ஏற்ற மாட்டார்கள். யாராவது சற்று ஸ்தூலமான ஆசாமி ஏறினால் அவரை இரண்டு பேர் என்று கணக்கு வைத்துக்கொண்டு 22 பேர்தான் ஏற்றுவார்கள். உட்கார்ந்து, உட்கார்ந்து கால் வலித்தால், நாமும் கண்டக்டரைப்போல் நடுவில் உள்ள இடத்தில் மேலும் கீழும் உலாவலாம்.

ஒரு காலத்தில் இவ்வளவு சௌகரியமாக இருந்த பஸ்தான், இப்பொழுது இந்த யுத்தம் வரப் போக நமக்கு இடியும், குத்தும் கொடுக்க ஆரம்பித்து விட்டன! இப்படி நாம் இடியும், குத்தும் வாங்கக் காரணமான இந்த யுத்தம் எப்பொழுது முடியும் என்று எல்லாரும் கேட்பது இயற்கையே அல்லவா?

ணம், கடவுள் பக்தியுள்ள ஜனங்கள் அடிக்கடி தேர், திருவிழா முதலிய இடங்களுக்குப் போய் இதை விட அதிகப்படியான இடியும், குத்தும் பட்டிருப்பதுதான்.

ஆனால் டிராம்தான் "என்றைக்கும் போடாத மகாராஜி" ஆயிற்று. "என்றைக்கும் போடும் மூதேவி"யான பஸ் ஏன் இப்படிக் கல்தாக் கொடுத்துத் தள்ளுகிறது?

முன்னெல்லாம், அதாவது யுத்தம் ஆரம்பித்த புதிதில், பஸ்களில் வேறு யாருக்கு இடம் கிடைத்தாலும், கிடைக்கா விட்டாலும் கல்லூரி மாணவிகளுக்கு மட்டும் இடம் கிடைத்து வந்தது. அதிலும் அவர்கள் எத்தனைக் கெத்தனை புது மோஸ்தராக உடை உடுத்திக் கொண்டிருக்கிறார்களோ, அத்தனைக் கத்தனை எல்லாரும் போட்டி போட்டுக் கொண்டு, "என் இடத்தில் உட்காருங்கள், என் இடத்தில் உட்காருங்கள்" என்று இடம் கொடுத்து வந்தார்கள்.

ஸ்திரீகளைக் கண்டதும் புருஷர்கள் எழுந்து நிற்க வேண்டியது என்னும் இந்த வழக்கம் மிகவும் நல்ல வழக்கம் தான். ஆனால் சிலர், இது ஏதோ புது வழக்கம் போலவும், இதுவரை நம் நாட்டில் இல்லாதது போலவும், தாங்கள் புதிதாகச் சீமையிலிருந்து இறக்குமதி செய்தது போலவும் நினைத்துக் கொள்ளுகிறார்களே, அது தான் பிசகு.

ஸ்திரீகளைக் கண்டதும் புருஷர்கள் நடுங்குவது இன்று, நேற்று ஏற்பட்ட வழக்கம் அல்ல. உலகம் சிருஷ்டிக்கப்பட்ட அன்றிலிருந்தே மனிதன் ஸ்திரீயைக் கண்டு நடுங்கத்தான் செய்கிறான். ஆனால் நம் நாட்டில் மட்டும், "நீ அடிக்கிறப்போல் அடி, நான் அழுகிறப்போல் அழுகிறேன்" என்று சொல்வார்களே, அதைப்போல் வீட்டுக்கு வெளியில் மட்டும், புருஷர்களைக் கண்டு தாங்கள் பயபக்தியுடன் நடந்து கொள்வது போல் ஸ்திரீகள் பாசாங்கு செய்து கொண்டிருந்தார்கள். இப்பொழுது அந்தப் பாசாங்கும் மேலே குறிப்பிட்ட சிலரால் வழக்கொழிந்து சிதைந்து கொண்டிருக்கிறது.

ஆனால், அது என்னமோ தெரியவில்லை, ஸ்திரீகளைக் கண்டதும் எழுந்து நிற்பது என்று வழக்கம் வைத்துக் கொண்டிருக்கும் இவர்கள் எல்லா ஸ்திரீகளுக்குமே எழுந்து நிற்பதில்லை. கல்லூரி மாணவிகளைத் தவிர வேறு யாரைக் கண்டாலும் — அவர்கள் கிழவிகளாக இருந்தாலும் சரி, கைக்குழந்தைக் காரிகளாக






# யுத்தம் எப்பொழுது முடியும்

நாடோடி

## இடியும், குத்தும்!

வெளியூர்களில் ரயில் வண்டிப் பக்கம் எட்டிப் பார்த்தால்தான் கல்தா! ஆனால் பட்டணத்திலோ வீட்டை விட்டு வெளியே வந்தாலே கல்தா! பஸ்ஸிலும் கல்தா! டிராமிலும் கல்தா! கல்தாவைப் பொருட்படுத்தாமல் உள்ளே ஏறினாலோ இடியும், குத்தும்!

இந்த டிராம் யோக்கியதை எல்லாருக்கும் வெகு காலமாகத் தெரிந்ததுதான். புளி மூட்டை மாதிரி சவாரி ஏற்றுவதில் நம் நாட்டு ஜட்கா வண்டிக்காரர்களை யாரும் மிஞ்சமுடியாது என்று நான் வெகுகாலம், அதாவது பட்டணத்துக்கு வரும் வரை, எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் அவர்களைத் தோற்கடித்து விட்டார்கள் இந்தச் சென்னை டிராம்வேக்காரர்கள்.

ஜட்கா வண்டியிலாவது குதிரையின் ஒத்துழைப்பும், சம்மதமும் கூட இருந்தால்தான் இது சாத்தியமாகும். அளவுக்கு மீறி வண்டிக்காரன் சவாரி ஏற்றி விட்டாலோ குதிரை சத்தியாக்கிரகம் பண்ண ஆரம்பித்துவிடும்.

ஆனால் டிராம் விஷயமாக மின்சாரம் இத்தகைய சத்தியாக்கிரகம் எதுவும் பண்ணுவதாகத் தெரியவில்லை. எத்தனை பேர் வந்தாலும் ஏற்றிக்கொள்ளுகிறது. இதனால்தானே என்னமோ சென்னை டிராம் கண்டக்டர்கள் அத்தனை அலட்சியமாக எத்தனை கூட்டம் இருந்தாலும் சரி, பிரயாணிகளை மிதித்துக் கொண்டும், துவைத்துக் கொண்டும் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்கும், அந்தக் கோடியிலிருந்து இந்தக் கோடிக்கும் போய்க்கொண்டே இருக்கிறார்கள்.

அப்படியாவது ஒரு ஆசாமியுடன் விடுகிறார்களா? கிடையாது. டிக்கெட் கொடுப்பதற்காக ஒரு கண்டக்டர், கண்டக்டர் டிக்கெட் கொடுத்தாகி விட்டதா என்று பரிசோதிப்பதற்காக ஒரு குட்டி இன்ஸ்பெக்டர், குட்டி இன்ஸ்பெக்டர் சரியாய்ப் பரிசோதனை செய்தாரா என்று பரிசோதிப்பதற்காக ஒரு பெரிய இன்ஸ்பெக்டர் என்று இம்மாதிரி மாறி, மாறி வந்துகொண்டே இருக்கிறார்கள்.

இதனால் ஜனங்கள் படும் இடியும், மிதியும் சொல்லத் தரமன்று.

ஆனால் இதில் ஒரு வேடிக்கை பார்த்தீர்களா? கடவுள் பக்தியுள்ள ஜனங்களை இந்த இடியும், மிதியும் அதிகமாகப் பாதிப்பதே கிடையாது. கார

# பிரபல எழுத்தாளர்

ஸோமாஸ்

★ ஜகதீச சர்மா வாழ்க்கையில் முதல் எடுப்பிலேயே அதிர்ஷ்டசாலியாகி விடவில்லை. அவர் முதலில் தாலூகா ஆபீஸில் குமாஸ்தாவாக மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார். பத்திரிகை உலகமும் எழுத்தாளர் உலகமும் மூர்ச்சை போட்டுக் கீழே விழும்படியான காரியம் செய்ய அவருக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது ஒரு பெரிய அதிசயம்தான். குடும்ப நிர்வாகத்தில் ஏற்பட்ட சிரமம்தான் ஜகதீச சர்மாவை எழுத்துலகத்தில் பிரசித்தி யடையச் செய்தது.

தன் சொந்தத் தேவைகளையே பூர்த்தி செய்து கொள்ள முடியாத நிலைமை ஏற்படும் போதுதான் மனிதன் அமானுஷ்ய சக்தி பெற்றுப் பிரமாதமான காரியத்தைச் சாதித்து விடுகிறான். இந்தத் தத்துவம் சர்மாவின் வாழ்க்கையில் உண்மையாயிற்று.

தாலூகா கச்சேரி குமாஸ்தா வேலையைத் தியாகம் செய்துவிட்டு அரு. அள. சித. ராம. பழனியப்பச் செட்டியாரிடம் கணக்கு வேலைக்கு அமர்ந்த பிறகுதான் அவருக்கு எழுத்துப் பைத்தியம் பிடித்தது.

ஒவ்வொரு பத்திரிகையும் சர்மாவின் அபார சாமர்த்தியத்தைப் பற்றிப் புகழ்ந்து எழுதியிருந்தது. இப்படி எல்லாப் பத்திரிகைகளும் போட்டி போட்டுக் கொண்டு எந்த எழுத்தாளனைப் பற்றியும் இது வரையில் எழுதியது கிடையாது. ஏதோ ஒரு மூலையில் கேட்பாரற்று மங்கிக் கிடந்த ஜகதீச சர்மாவுக்கு இவ்வளவு புகழ் மாலை யென்றால் அது யாருக்குத்தான் ஆச்சரியத்தைக் கொடுக்காது?

இவ்வளவு பிரசித்தி யடைந்த ஜகதீச சர்மா தாம் சென்னையி லிருந்தால் தொந்தரவு அதிகம் என்பதை எளிதில் அறிந்து கொண்டார். அவருடைய அபார மூளைக்கு இதை யறிவது ஒரு பிரமாதமா என்ன?

ஜகதீச சர்மாவின் வெளியேற்றம் பழனியப்பச் செட்டியாருக்கு மிகவும் கவலையைக் கொடுத்து விட்டது. இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா என்று சொல்லும்படி பரம சாதுவாக விளங்கிய சர்மாவுக்கு இவ்வளவு எழுத்து வன்மை இருக்கும் என்று செட்டியார் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. தன் வேலையிலேயே கவனமாயிருந்த சர்மாவைப்போல் இனி செட்டியாருக்கு யார் கிடைக்கப் போகிறார்கள்?

ஜகதீச சர்மாவின் எழுத்து வன்மை அரசாங்கத்துக்கும் எட்டி விட்டது. அவரைத் தேடி யழைத்து வந்து அவருக்கு உரிய மரியாதை செய்ய அவர்கள் நினைத்தனர். சர்மாவின் எழுத்து வன்மை அரசாங்கத்தாருக்கு அவரை வெளியே விடக் கூடாது என்னும் அபிப்பிராயத்தைக் கொடுத்தது. ஆகவே, அவர்கள் அவரைத் தனிமையில் பூட்டி வைத்து விட்டனர். சிறையில்தானே சிறந்த எழுத்தாளர்கள் உயர்ந்த இலக்கியங்களை சிருஷ்டி செய்கின்றனர்?

சர்மா மூன்று மாத காலம் அகோராத்ரம் சாதகம் செய்து எழுதினார். எழுத்தில் வெற்றியும் அடைந்தார். இரண்டாயிரம் ரூபாய் பணமும் கிடைத்தது. என்ன, ஒரே ஒரு கட்டுரைக்கு இரண்டாயிரம் ரூபாயா? அதென்ன கட்டுரை?

அவர் எழுதிய கட்டுரை நவரஸம் ததும்பும் நாடகமல்ல; திடுக்கிடும் சம்பவங்களும் காதல் தத்துவமும் நிறைந்த நவீனமுமல்ல; தூங்கும் தமிழனைத் தட்டியெழுப்பும் உத்வேக நடையிலமைந்த கட்டுரையுமல்ல; மானிட வாழ்க்கையின் சோக நாடகங்களைப் படம் பிடித்துக் காட்டி வாசகர்களின் உள்ளத்தை ஊடுருவிப் பாயும் உணர்ச்சிச் சித்திரமுமல்ல; பக்திப் பெருக்கால் அகங் கனிந்து உருகிப் பரம்பொருளுடன் ஒன்றுபட்டு நின்ற பக்தமணிகளின் சரித்திரமுமல்ல! பின் என்ன?

**அரி. வெரி. இரு. அள. மாவன்னு கடைக்கு.**

**இதைக் கொண்டுவரும் நமது காரியஸ்தர் ஜகதீச சர்மாவினிடம் ரூ. 2000 கொடுத்தனுப்ப வேண்டியது. இப்படிக்கு,**

**அரு. அள. சித. ராம. பழனியப்பச் செட்டியார்.**

இந்த அற்புதமான கட்டுரைதான் சர்மாவுக்குப் பெரும் புகழ் அளித்தது. பழனியப்பச் செட்டியாரின் கையெழுத்தைக் காப்பி யடிப்பதில்தான் சர்மா மூன்று மாத காலம் சிரமம் எடுத்துக் கொண்டார். அவருடைய சிரமம் வீண் போகவில்லை—ஏன்? எழுத்துலகில் பிரசித்தி பெற இது ஒரு நல்ல வழி அல்லவா?

போனால் அதைப் போன்ற தொல்லை வேறு ஒன்றும் கிடையாது என்று தோன்றுகிறது. நமது சுற்றத்தாருடன் நாம் பிரிந்து வாழும் போதோ, அல்லது பிரிந்து செல்லும் போதோ இருக்கிற ஆசையும் அன்பும் சேர்ந்து வாழும்போதோ, அல்லது சேர வரும்போதோ எங்கே இருக்கிறது?

வஞ்சியைப் பிரசவத்துக்காக அழைத்துச் செல்ல அவளுடைய அம்மா வந்திருந்தாள். அப்பொழுது, "நீங்க என்னுத்துக்கு அழைச்சுக்கிட்டுப் போறீங்க? இங்கேயேதான் இருக்கட்டுமே! எல்லாம் நான் பார்த்துக்கிறேன்!" என்றாள் கங்கம்மா.

"ஆமாம், அம்மா! எனக்குக்கூட அவரை விட்டுட்டு வாரதுக்கு என்னமோ மாதிரியா யிருக்குது! இங்கேயேதான் இருக்கிறேனே, எல்லாம் இந்த அம்மா பார்த்துக்கிறாங்க!" என்றாள் வஞ்சி.

"இருந்தாலும் நாலு பேர் நாலு சொல்லுவாங்க!" என்று சொல்லி, வஞ்சியைத் தன்னுடன் அழைத்துச் சென்று விட்டாள் அவளுடைய அம்மா.

* * *

**வ**ஞ்சி பிரசவித்து மூன்றாவது மாதம் நடந்துகொண்டிருந்தது. கந்தசாமி தன் மனைவியை அழைத்துப் போக வந்தான். அவனுடன் செல்ல வஞ்சிக்கு எவ்வளவோ ஆசைதான். ஆனால் கங்கம்மாவை நினைத்த போது, அங்கே வந்து அவளுடைய வம்புக்கு ஆளாவதைக் காட்டிலும், இங்கேயே இன்னும் இரண்டு மாதமாவது தொல்லை யில்லாமல் இருக்கலாம் என்று அவளுக்குத் தோன்றிற்று. இதைக் குறிப்பாகக் கந்தசாமி யின் காதிலும் போட்டுப் பார்த்தாள் வஞ்சி. அவனுக்கும் அவள் சொல்வது ஒரு விதத்தில் நல்லதென்றே பட்டது.

மறு நாள் கந்தசாமி தன் ஊருக்குப் புறப் படுவதற்காக ஆயத்தம் செய்துகொண் டிருந்தபோது, அவனுக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது இதுதான்:

சிரஞ்சீவி கந்தசாமிக்கு ஆசீர்வாதம்.

சண்டைக்குப் போனவர் சாமர்த்திய மாகத் திரும்பி வந்து விட்டார். கபாலி அவருடைய கண்ணிலேயே இருந்தானாம். என்னையும் விட்டு இருக்க அவருக்கு இஷ்டமில்லையாம். ஆகவே, அவர் ஒரு யுக்தி செய்தாராம். எந்த நேரம் பார்த்தாலும் வேண்டுமென்றே வயிற்று வலி என்று படுத்துக் கொண் டாராம். எந்த வைத்தியரால்தான் அந்த இல்லாத வயிற்று வலியைத் தீர்க்க முடியும்? ஆகவே, அவர் சண்டைக்கு உதவமாட்டார் என்று விரட்டி விட்டார்களாம். நேரே பட்ட ணத்திற்கு வந்த அவர், அங்கே தனக்கு வேலை பார்த்துக் கொண்டு, இங்கே என்னை அழைத்துப் போக வந்திருக் கிறார். இந்தக் கடிதம் கண்டவுடன் நீங்கள் உடனே வந்து எங்களை அனுப்பி வைக்கவும்.

கங்கம்மா.

இதைப் படித்ததும், "வஞ்சி! இப்பவே நீயும் என்னுடன் புறப்பட வேண்டியது தான்!" என்று துள்ளிக் குதித்தான் கந்தசாமி. அவனுடைய தோள்களை ஆசை யுடன் பிடித்துத் தொங்கிக் கொண்டு, "என்ன எழுதி யிருக்கு?" என்று கேட் டாள் வஞ்சி.

விஷயத்தைச் சொன்னான் கந்தசாமி. அதைக் கேட்ட வஞ்சியின் வதனம், காலை தேவனைக் கண்ட கமலம்போல் பூத்தது!

இந்தக் காட்சி எந்த நாத்தனாருக்கும் பிடிக்காத காட்சிதான்! ஆனால் ஏன் பிடிக்க வில்லை என்றுதான் எனக்குத் தெரியவில்லை.



★

## யாருக்குக் கேட்காது?

பிச்சைக்காரன் :—சாமி, பிச்சை போடுங்க சாமி! இரண்டு காதும் கேக்காது சாமி!

வீட்டுக்காரர் :—யாருக்கடா காது கேட் காது!

பிச்சைக்காரன் :—எனக்குத்தான் சாமி!

★



உடனே அது அழுதுகொண்டே அம்மாவிடம் சென்று முறையிட்டது. இந்த மாதிரி ஒரு நல்ல சந்தர்ப்பத்தை அவள் நழுவ விடுவாளா? திடுதிடுவென்று ஓடி வந்து, "ஏண்டி! உங்க அப்பன் வீட்டுச் சொத்து என்னடி கெட்டுப் போச்சு? அந்தக் குழந்தை தன் மாமன் வீட்டிலே அத்தனை மா எடுத்துத் தின்னச் சொத்தயில்லையா?" என்று அவள் வஞ்சியின் தாடையில் ஒரு இடி இடித்தாள். அந்த இடியில் வஞ்சி கீழே சாய்ந்து விட்டாள்.

அடுத்த கணத்தில் அங்கே வந்த கந்தசாமி, "அக்கா! அந்தப் பெண்ணு என்னத்துக்கு அப்படிப் படுத்துக் கிடக்குது?" என்று விசாரித்தான்.

"அது என்னத்துக்கோ?" என்று எரிந்து விழுந்தாள் அக்கா.

இந்தச் சமயத்தில் தன் கணவனின் குரலைக் கேட்டு முக்கி முனகிக் கொண்டே எழுந்திருந்தாள் வஞ்சி.

"என்ன உடம்புக்கு?" என்று வஞ்சியை விசாரித்தான் கந்தசாமி.

"உடம்புக்கு ஒண்ணுமில்லே; கூழுக்கு இந்த மாவை அரைச்சுக்கிட்டு இருந்தேன். என்னமோ தலையைச் சுத்தறாப் போல இருந்தது; கொஞ்ச நேரம் படுத்துக் கிட்டேன்!" என்றாள் வஞ்சி.

வஞ்சி எப்பொழுதுமே இப்படித்தான். அவள் வீட்டில் நடக்கும் சச்சரவுகளைப் பற்றித் தன் கணவனிடம் ஒன்றுமே சொல்லுவதில்லை.

"அக்கா! நீதான் அந்த மாவைக் கொஞ்சம் அரைச்சுக் கொடுக்கக் கூடாதா?" என்று கேட்டான் கந்தசாமி.

"அரைப்பேண்டா, அரைப்பேன்; ஏன், அவளைக்கூடக் கொஞ்சம் தூக்கி உன் பக்கத்திலே உட்கார வைக்கட்டுமா?" என்று ஏளனமாகக் கேட்டாள் கங்கம்மா.

கந்தசாமி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டான். அவன் மனதை மாற்றுவதற்காக, "வெய்யில்லே அலைஞ்சுட்டு வந்தியே, கொஞ்சம் தயிரைப் போட்டுக் கூழைக் கரைத்துக்கிட்டு வாட்டுமா?" என்று கேட்டாள் வஞ்சி.

"எடுத்துக்கிட்டு வாயேன்!" என்றான் கந்தசாமி.

உள்ளே போய்ப் பார்த்தால் தயிரைக் காணோம். அதைக் கபாலி காலி செய்து விட்டிருந்தான். கேட்டால் பூனையின்மேல் பழியைப் போடுவார்கள். "கேட்காமல் இருப்பதே நல்லது" என்று தீர்மானித்து, வெறும் கூழைக் கரைத்துக்கொண்டு வந்தாள் வஞ்சி.

"என்ன, வஞ்சி! தயிரு இல்லையா?"

"இருந்தது; இப்போ பார்த்தாக் காணோம். பூனை குடிச்சிட்டாப் போல இருக்குது!" என்று தன் நாத்தனார் சொல்லப் போவதைத் தானே சொல்லி வைத்தாள் வஞ்சி.

அப்பொழுது, "இல்லே, மாமா! நான் தான் குடிச்சுட்டேன்!" என்று சமர்த்தாகச் சொல்லிக் கொண்டே வந்தான் கபாலி.

"அட, என் கண்ணு! குடிச்சுட்டியா?" என்று தன் வயிற்றெரிச்சலை வெகு லாகவமாக வெளியிட்டான் கந்தசாமி.

3

"சேர்ந்து வாழ்வதுதான் சிறந்தது" என்கிறோம். ஆனால் வாழ்க்கையில் பார்க்கப்

# நாத்தனார்

### விந்தன்

"அன்னம்மா! இந்த அதிசயத்தைக் கேட்டாயா? என்னமோ எங்க வீட்டுக்காரி ரெண்டு மாசமா முழுகாம இருக்காளாம். அதுக்கு அவ பண்ணுகிற அட்டகாசத்தைப் பார்த்தா, எனக்கு என்னமாத்தான் இருக்குது, தெரியுமா? தலையைச் சுத்தறதாம், மயக்கம் வருதாம், வாந்தி வருதாம் — இன்னும் என்னென்னமோ எல்லாம் சொல்றா! என்று, வீட்டு வேலையைச் செய்யறதுக்கு நான் ஒருத்தி இருக்கேனே, இல்லையோ?" என்றாள் கங்கம்மா.

"என்னமோ அறியாதது! உன்னுடைய குழந்தை மாதிரி நினைச்சுக்கிட்டுப் போயேன்!" என்றாள் அன்னம்மா.

"போயும் போயும் நான் உன்கிட்ட நியாயம் கேட்க வந்தேனே!" என்று அவள் மேல் எரிந்து விழுந்து விட்டு, அடுத்த வீட்டு ஆண்டாளிடம் மேற்சொன்ன அநியாயத்தைத் தெரிவித்தாள் கங்கம்மா.

அவள் அதைக் கேட்டு விட்டு, "வீட்டு வேலைக்கு வேறே ஆளு இருந்தா, அவள் அப்படியும் இருப்பா, அதுக்கு மேலேயும் இருப்பா! எல்லாம் அவனுங்க கொடுக்கிற செல்லம்!" என்று ஆண்டாளு கங்கம்மாவுடன் ஒத்து ஊதினாள்.

கங்கம்மாவுக்குப் பொழுது விடிந்தால் எப்பொழுதும் இதே வேலைதான். அவளுக்குத் தன் தம்பி கந்தசாமியைப் பற்றியும், அவன் மனைவி வஞ்சியைப் பற்றியும் எவரிடமாவது ஏதாவது குறை சொல்லவில்லையென்றால் பொழுது போகாது. பட்டணத்தில் வாழ்ந்து வந்த அவள், தன்னுடைய கணவன் சண்டைக்குப் போய் விட்டதால் தம்பியின் வீட்டுக்கு வந்திருந்தாள்.

முதன் முதலில் அக்காளின் வருகையை அறிந்தபோது, கந்தசாமி எவ்வளவோ சந்தோஷப்பட்டான். அக்கா வந்தால் வஞ்சிக்குத் துணையாக இருப்பாள் என்று அவன் நினைத்தான். தான் இருக்கும் நிலைமையில் அவள் வருவதைப்பற்றி வஞ்சிக்கும் முதலில் எவ்வளவோ சந்தோஷமாய்த்தா னிருந்தது. ஆனால் அதெல்லாம் இப்பொழுது பகற் கனவாகி விட்டது. அவள் வந்ததின் பயனாக, அவர்கள் வாழ்க்கையில் அனுபவித்து வந்த தித்திப்பு, கசப்பாகி விட்டது.

## 2

கங்கம்மாவுக்குக் கபாலி என்றொரு பிள்ளை. பிள்ளை என்றாலும் பிள்ளை, மணியான பிள்ளை. வாய் ஒரு நிமிஷம்கூட அசையாமல் இராது.

அன்று வஞ்சி கூழுக்காகக் கம்பு மா அரைத்துக் கொண்டிருந்தாள். யந்திரத்திலிருந்து மா கொஞ்சம் கொஞ்சமாக விழுந்து கொண்டிருக்கும்போதே, கபாலி அவற்றையெல்லாம் கபளீகரம் செய்து கொண்டிருந்தான். வஞ்சி தன் வேதனையை எவ்வளவோ தூரம் சகித்துக்கொண்டு அந்த வேலையைச் செய்து கொண்டிருந்தாள். மனித இதயம் மண்ணாங் கட்டியா, மாறுதல் இல்லாம லிருப்பதற்கு? வஞ்சிக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ஆகவே, "பச்சை மாவை இப்படித் தின்னு வயித்துக்கு ஆகுமா?" என்று கேட்டுக் கொண்டே, அந்தப் பிள்ளையின் கையைப் பிடித்துத் தள்ளினாள்.



# காலக்ஷேபம்

## தேவையாய்ப் போச்சே!

உபாத்தியாயர் :—அடே, பானு, இரண்டும் மூன்றும் சேர்ந்து எத்தனை?



பானு :—ஆறு, ஸார்.

உபாத்தியாயர் (கோபத்துடன்) :—நீ தப்பிதமாகச் சொன்னதற்காக, உனக்கு ஆறு குட்டுக்கள் விழப் போகின்றன.

பானு :—இப்படித் தெரிந்திருந்தால் நான் ஒன்றுமே சொல்லியிருக்க மாட்டேனே!

—ஆர். ஸௌந்தரராஜன்.

○

## குறைவு

இரண்டு பிரயாணிகள் ஓர் ஓட்டலில் சாப்பிட்டு விட்டு வெளியே வந்தனர்.

முதல் பிரயாணி :—இந்த ரேஷன் காலத்திலும் நாலணாவிற்குச் சாப்பாடு போடும்போது நமக்கென்ன குறைச்சல்?

இரண்டாம் பிரயாணி :—அந்த நாலணா இல்லாததுதான்!

—டி. ரங்கராஜன்.

○

## அப்பா சொன்னது!

சீனு (அடுத்த வீட்டுக்காரரிடம்) :—மாமா, எங்க அப்பா கொஞ்சம் மண்வெட்டி வாங்கி வரச் சொன்னார்.



அடுத்த வீட்டுக்காரர் :—இன்னும் என்னடா உங்கப்பா சொன்னார்?

சீனு :—'அந்த அற்பப் பயல் இல்லேன்னுட்டா கோடியாத்து முத்து மாமாவிடம் வாங்கி வா' என்று சொன்னார்.

—ஜி. சுப்ரமணியம்.

## பலம் வேண்டுமா?

மனைவி :—லேடி டாக்டரிடம் போயிருந்தேன். பலம்கொடுக்கிற டானிக்காகச் சாப்பிட வேண்டுமாம். என் நாக்கைக் காண்பிக்கச் சொன்னார்.



புருஷன் (நடுங்கிப் போய்) :— ஐயோ! உன் நாக்குக்கு இன்னும் வேறே பலம் வேண்டுமா? —கே. மகாதேவன்.

○

## சரியான பதில்!

தகப்பனார் (பையனைப் பார்த்து) :—உனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறதைவிட, குட்டிச் சுவரிலே முட்டிக் கொள்ளலாம் போலிருக்கே?

பையன் :—வேண்டாமப்பா! குட்டிச் சுவரிலே முட்டிக்கொண்டால் மண்டை ரெண்டாப் போயிடுமே! —அம்பா.

○

## கரைந்து விட்டது!

ஓட்டலில் ஒருவர் :—ஏனப்பா காப்பியில் சர்க்கரையே இல்லையே?

சப்ளை செய்பவர் :—அதெப்படி ஸார் இருக்கும்? அப்பொழுதே காப்பியில் கரைந்துவிட்டதே. —பி. எம். சாமி.

○

## நடுவில்

மூன்று பேர் ஒரு தெருவில் சென்று கொண்டிருந்தனர். கடைசியில் சென்று கொண்டிருந்த இருவரும் மத்தியில் இருப்பவரைக் கிண்டல் செய்ய எண்ணி அவரைப் பார்த்து, "ஓய்! நீர் பைத்தியமா? அல்லது முட்டாளா?" என்று கேட்டனர்.



மத்தியில் இருப்பவர் :—நான் தற்சமயம் இரண்டுக்கும் நடுவில் இருக்கிறேன். —எஸ். ஏ. சுப்புசாமி.




காட்டில் எலியார் ஒரு தையற் கடை வைத்திருந்தது. சிங்கராஜாவின் மகளுக்குப் பிறந்த நாள் வந்தது. காட்டில் உள்ள மிருகங்களுக்கெல்லாம் சிங்கராஜா பத்திரிகை அனுப்பிற்று. ஆனால் எலியாருக்கு மாத்திரம் அழைப்புப் பத்திரிகை வரவில்லை.

எலி ஒரு மாதமாகவே சிங்கராஜகுமாரியின் பிறந்த நாளுக்குப் போக வேண்டுமென்ற ஆசையுடன் புதிதாகத் துணிகள் வாங்கித் தைத்தது. தைத்த ஆடைகளைத் தன் குழந்தைகளின் பல்லுக்கு அகப்படாமல் பத்திரமாக வைத்திருந்தது. தனக்கு மட்டும் அழைப்பு வராமல் போகவே எலிக்குக் கோபம் கோபமாக வந்தது.

பிறந்த நாளுக்கு இரண்டு நாட்களே இருந்தன. எல்லா மிருகங்களும் சிங்கராஜா வீட்டுக் கல்யாணத்திற்குப் போவதற்காக ஆடைகள் தைத்துக்கொள்ள எலியாரைத் தேடி வந்தன. ஆனால் தையற்கடை மூடிக் கிடந்தது. வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டின.



எலியார் மெதுவாக முக்கி முனகிக் கொண்டு கதவைத் திறந்தது. மிருகங்களெல்லாம் "ராஜகுமாரியின் பிறந்த நாளுக்குப் போட்டுக் கொண்டு போவதற்கு உடைகள் தைக்க வேண்டும். ஆகையால் சிரமத்தைப் பாராமல் தைத்துக் கொடுக்க வேண்டும்" என்று எலியாரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டன.

"நான் ஒரு மாதமாய் சுரத்தினால் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கிறேன். என் கையும் காலும் அசைக்கவே முடியாது" என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டது எலியார்.

மிருகங்களெல்லாம், "ஐயோ! உன்னைக் கேட்டுக் கொள்ளாமல் பணத்தைக் கொட்டி உயர்ந்த துணிகளாக வாங்கி விட்டோமே! இந்தக் காட்டில் வேறு தையற்காரர் கிடையாதே. பக்கத்து ஊருக்குப் போவோமென்றால் அங்கேயும் தையற்காரர் கஷ்டப் தானாம். எல்லோரும் மிலிடரிக்குச் சட்டை தைப்பதற்குப் போய் விட்டார்களாம். அந்த ஊர்க்காரர்களே கஷ்டப் படுகிறார்கள். ஒரு மாதமாய் வண்ணான் கூட வரவில்லை. இந்தச் சங்கடத்திற்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை" என்று வருத்தப்பட்டுக் கொண்டே போயின.

எலியாரும், "திமிர் பிடித்த மிருகங்களுக்கு நன்றாய் வேண்டும். நண்டு, தேரையைவிட நாமென்ன இளப்பமா? இன்னும், சிங்கராஜாவின் மகளுக்கே சட்டை இல்லாமல் பண்ணி விட்டால் தான் எலியாரின் அருமை தெரியும்" என்று கதவைத் தாளிட்டுக் கொண்டு போய்விட்டது. மிருகங்களெல்லாம்

சிங்கராஜாவினிடம் போய் முறையிட்டன.

"என் மகளுக்குச் சட்டை தைக்க வேண்டுமே? இதற்கென்ன செய்வது? குழந்தையின் பிறந்த நாளைப் புது சட்டையில்லாமல் எப்படிக் கொண்டாடுவது?" என்று சிங்கராஜா தன் மந்திரி நரியாரைக் கேட்டது.

"கவலைப்பட வேண்டாம், மகாராஜா! நான் எலியாரைச் சந்தோஷப் படுத்திச் சட்டை தைத்து வருகிறேன். எல்லோருக்கும் அனுப்பியது போல் எலியாருக்கும் அழைப்புப் பத்திரிகை அனுப்பினீர்களா?" என்று கேட்டது நரி. "இல்லையே. நான் மறந்தேபோய் விட்டேன்" என்றது சிங்க ராஜா.

"அதனால்தான் எலியாருக்குக் கோபம்போல இருக்கிறது. நான் இப்பொழுதே புறப்பட்டு அதன் வீட்டிற்குப் போகிறேன்" என்றது நரி.

எலியாரின் வீட்டுக் கதவு தட்டப்பட்டது. எலியார் ஓடி வந்து கதவைத் திறந்தது. நரியாரைப் பார்க்கவே அதற்குச் சந்தோஷம் தாங்கவில்லை.

"இந்தா! எல்லோரையும் போல் உனக்கு அழைப்பைத் தபாலில் அனுப்பக் கூடாதென்று ராஜா என்னையே நேரில் கொடுத்து விட்டு வரச் சொன்னார்" என்று சொல்லி எலியாரிடம் அழைப்புப் பத்திரிகையைக் கொடுத்தது நரி.











........ ஆடைகள் தைத்துக் கொள்ள எலியாரைத் தேடி வந்தன.

எலி சந்தோஷத்துடன் ராஜாவின் மகளுக்கும் மிருகங்களுக்கும் சட்டை தைத்துக் கொடுத்தது. சிங்கராஜாவின் மகளுக்குப் பிறந்த நாள் தடபுடலாக நடந்தது. எலியார் தன் கையினாலேயே அழகான பட்டுச் சட்டையைச் சிங்கராஜ குமாரிக்குப் பிறந்த நாள் பரிசாக அளித்தது. சிங்கராஜாவும் சட்டையைப்பார்த்துச் சந்தோஷப் பட்டு எலியின் விரலுக்கு ஏற்றாற்போல் ஒரு மோதிரத்தைப் பரிசாக அளித்தது. எலியின் குதூகலத்திற்குக் கேட்கவா வேண்டும்?

மகாராஷ்டிர சக்கரவர்த்தியை அவருடைய முக்கிய படைத் தலைவர்கள் சகிதமாக நாம் சந்திக்கும்போது, மேற்கூறியபடி ஜைன குருமார்கள் போய் விட்டதைக் குறித்துத்தான் பேச்சு நடந்து கொண்டிருந்தது.

* * *

வானை அளாவிப் பறந்து கொண்டிருந்த வராகக் கொடியின் கீழ், யானைகளின் துணைகொண்டு அமைத்திருந்த விஸ்தாரமான கூடாரத்தின் நடுவில், தந்தச் சிங்காதனத்தில் மணி மகுடம் தரித்த புலிகேசி மன்னன் கம்பீரமாக அமர்ந்திருந்தான்.

சிங்காதனத்துக்கு எதிரே தரையிலே விரித்திருந்த இரத்தினக் கம்பளத்தில் ஏழெட்டுப் பேர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் படைத் தலைவர்கள் முதலிய பெரிய பதவி வகிப்பவர்களாயிருக்க வேண்டுமென்று அவர்களுடைய தோற்றத்திலிருந்து தெரிய வந்தது. அவர்கள் எல்லாருடைய கண்களும் பயபக்தியுடன் புலிகேசியின் முகத்தையே நோக்கிய வண்ணம் இருந்தன.

புலிகேசியும் அவனுடைய படைத் தலைவர்களும் பேசிய பாஷையில் தமிழ்ச் சொற்களும் பிராகிருதச் சொற்களும் சமமாகக் கலந்திருந்தன.*

“இலட்சணந்தான்! இந்தத் திகம்பர சந்நியாசிகள் என்ன எண்ணிக் கொண்டு நம்முடன் கிளம்பினார்கள் என்று தெரியவில்லை. இவர்கள் இஷ்டப்படியே யுத்தத்தை நடத்துவதாயிருந்தால் உருப்பட்டால் போலத்தான்” என்று புலிகேசி கூறினான்.

“அவர்கள் போய்விட்டதே க்ஷேமம்; அவர்கள் நம்மோடு வந்து கொண்டிருந்தால் யுத்தம் செய்யவே முடியாது; கோயில்களும் சங்கிராமங்களும் ஸ்தூபங்களும் கட்டிக்கொண்டு போகலாம்!” என்றான் ஒரு படைத்தலைவன்.

எல்லாரும் கலகலவென்று சிரித்தார்கள்.

சிரிப்பு அடங்கியதும் இன்னொரு படைத்தலைவன், “ஜைன முனிவர்களை அனுப்பிவிட்டோம்; சரிதான். ஆனால் புத்த பிக்ஷுவின் இஷ்டப்படிதானே யுத்தம் நடத்துவதாக ஏற்பட்டிருக்கிறது?” என்று கூறி, சிறிது பயத்துடனே புலிகேசியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான்.

“ஆகா! அது வேறு விஷயம். பிக்ஷுவின் யோசனையைக் கேட்டதில் இதுவரையில் நாம் எவ்வித நஷ்டமும் அடையவில்லை. எந்தக் காரியமும் தவறாகப் போனதுமில்லை. இனிமேலும் போகாது” என்றான் புலிகேசி.

பிறகு, எதிரிலிருந்தவர்களில் ஒருவனைக் குறிப்பிட்டுப் பார்த்து, “நமது வேவுப் படை வெகு லட்சணமாக வேலை செய்கிறது போலிருக்கிறதே! நாகநந்தியின் தூதனை உம்முடைய ஆட்கள் கண்டுபிடித்துக் கொண்டு வருவதற்கு மாறாக, தூதனல்லவா நம்மைத் தேடிவந்து பிடித்திருக்கிறான்?” என்று கூறியபோது, இயற்கையாகவே கடுமை நிறைந்த அவன் குரலில் இன்னும் அதிகக் கடுமை தொனித்தது.

அந்த ஒற்றர் படைத் தலைவன் ஒரு கணம் தலை குனிந்திருந்து விட்டு, பிறகு நிமிர்ந்து புலிகேசியை நோக்கி, “இல்லை, சத்யாச்ரயா! இதில் ஏதோ பிசகு நேர்ந்திருக்கிறது. நான் அனுப்பிய ஆட்கள் இன்னும் வந்து சேரவில்லை!...” என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே, கூடாரத்திற்குள் யாரோ வருவது கண்டு திரும்பிப் பார்த்து, “ஆஹா! இதோ வந்து விட்டார்களே!” என்றான்.

அப்போது, பின்கட்டு முன்கட்டாகக் கட்டியிருந்த பரஞ்சோதியை முன்னால் தள்ளிக்கொண்டு அவனைச் சிறைப்பிடித்து வந்த வீரர்கள் உள்ளே வந்து கொண்டிருந்தார்கள்.

அந்தக் காட்சியைப் பார்த்த புலிகேசி, “இது என்ன? இது என்ன? இந்தச் சிறுவன் யார்?” என்று கேட்டது, பரஞ்சோதியின் காதில் இடிமுழக்கம் போல் விழுந்தது.

---

* பிற்காலத்தில், இதுதான் கன்னட பாஷையாயிற்று.

துணையாகக் கிடைத்த வஜ்ரபாஹுவின் முகந்தான் என்பது தெரிந்தது.

முதலில், பரஞ்சோதிக்குச் சிறிது உற்சாகம் உண்டாயிற்று. உடனே அவன் மனதில், "நாம் இந்த கதியை அடைந்ததற்கு மூல காரணம் இந்த மனிதன்தான்" என்ற எண்ணம் தோன்றியது.

கண்ணில் கனல் எழப் பரஞ்சோதி வஜ்ரபாஹுவைப் பார்த்து விழித்தான்.

வஜ்ரபாஹுவோ பரஞ்சோதியைப் பார்த்து மிக்க அதிசயத்தை அடைந்தவனைப்போல், "தம்பி! இது என்ன கோலம்!" என்றான். பிறகு, அவனை அழைத்து வந்த வீரர்களிடம் பிராகிருத பாஷையில் ஏதோ கேட்டான். அவர்களில் ஒருவன் அதே பாஷையில் மறுமொழி கூறினான். பின்னர் வஜ்ரபாஹு பரஞ்சோதியைப் பார்த்து, "தம்பி! பயப்படாதே! மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி சத்யாச்ரய புலிகேசி மன்னரிடம் உள்ளது உள்ளபடி சொல்லு! உனக்குத் தீங்கு ஒன்றும் நேராது!" என்றான்.

வஜ்ரபாஹுவின் வார்த்தைகளைக் காட்டிலும், அவனுடைய பிரகாசமான கண்களில் மின்வெட்டைப் போல் தோன்றிய சமிக்ஞையானது பரஞ்சோதிக்கு அதிக தைரியத்தை ஊட்டியது.

## அத்தியாயம் 42

## சத்யாச்ரயன்

சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட இந்த வரலாற்றில் மிகவும் முக்கியமானதொரு பாத்திரத்தை இந்த அத்தியாயத்தில் நேயர்களுக்கு அறிமுகப் படுத்தப் போகிறோம்.

வாதாபியைத் தலைநகராகக் கொண்டு, வடக்கே நர்மதை வரையிலும் தெற்கே துங்கபத்திரை வரையிலும் பரந்து கிடந்த மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியை, — பாரத நாட்டில் அந்தக் காலத்திலிருந்த வீரர்களுக்குள்ளே ஒப்பற்ற மகா வீரனை, — சத்யாச்ரய புலிகேசியை நேயர்கள் இப்போது சந்திக்கப் போகிறார்கள்.

அப்படிச் சந்திப்பதற்கு முன்னால், அந்த மகா வீரனின் பூர்வ சரித்திரத்தை நேயர்கள் தெரிந்து கொள்ளுதல் உபயோகமாயிருக்கும்.

* * *

புலிகேசியும் அவனுடைய சகோதரர்களும் சிறுவர்களாயிருந்தபோது, அவர்களுடைய சித்தப்பன் மங்களேசனுடைய கொடுமைக்கு ஆளாக நேர்ந்தது. மங்களேசனுடைய சிறையிலிருந்து தப்பி ஓடி, அவர்கள் வெகு காலம் அடர்ந்த காடுகளில் ஒளிந்து வாழும்படி நேரிட்டது. இந்தக் காலத்தில் அவர்கள் அநுபவித்த அளவில்லாத கஷ்டங்கள் அவர்களுடைய தேகத்தை வஜ்ர தேகமாக்கி, அவர்களுடைய உள்ளத்தில் வயிரம் ஏற்றி, அவர்களை இணையற்ற வீர புருஷர்களாகவும் ஈவிரக்கமற்ற கடூர சித்தர்களாகவும் செய்து விட்டன.

உரிய காலத்தில் புலிகேசி தன் சகோதரர்களுடன் காட்டை விட்டு வெளி வந்து, பெரும் படை திரட்டினான். சித்தப்பனை எளிதில் வென்று அப்புறப் படுத்தி விட்டு, வாதாபி சிங்காதனத்தில் ஏறினான். பின்னர், தன்னுடைய வீரத் தம்பிமார்களின் துணை கொண்டு வாதாபி ராஜ்யத்தை விஸ்தரிக்கத் தொடங்கினான். இவ்விதம் வட திசையில் அவனுடைய ராஜ்யம் விஸ்தரித்துக் கொண்டு போய் நர்மதை நதிக்கரையை எட்டிய போது அவனுடைய சைன்யமானது, உத்தர பாரதத்தின் ஏக சக்ராதிபதியாய் விளங்கிய ஹர்ஷவர்த்தனரின் படைகளுடன் முட்ட வேண்டியதாயிற்று.

நர்மதை நதியின் இரு கரைகளிலும் மாறி மாறிப் பல வருஷ காலம் போர் நடந்து கொண்டிருந்தது. வாதாபிப் படைகள் எவ்வளவோ வீரத்துடன் போர் புரிந்தும், வட நாட்டிலிருந்து

மேலும் மேலும் மூலபலத்தைப் போல் ஹர்ஷரின் சைன்யங்கள் வந்து கொண்டிருந்த படியால், முடிவான வெற்றி காண முடியவில்லை.

இந்த நிலைமையில், லட்சோப லட்சம் வீரர்கள் அடங்கிய பெரும் சைன்யத்துக்கு ஹர்ஷவர்த்தனர் தாமே தலைமை வகித்து நடத்திக்கொண்டு வருவதாகத் தெரிய வந்தபோது, புலிகேசி மேலும் அவருடன் போராடுவது விந்திய பர்வதத்தில் முட்டிக் கொள்வதே யாகும் என்பதை உணர்ந்து சமாதானத்தைக் கோரினன். புத்த சமயப் பற்றுடைய மகாபுருஷரான ஹர்ஷவர்த்தனரும் அதற்கு உடனே இணங்கியதுடன் புலிகேசியின் வீர தீரங்களைப் பாராட்டி நர்மதைக்குத் தெற்கேயுள்ள பிரதேசத்துக்குச் சக்கரவர்த்தியாக அவனை அங்கீகரித்துக் கௌரவித்து விட்டுத் திரும்பினர்.

பின்னர், புலிகேசியின் கவனம் தென்னாட்டை நோக்கித் திரும்பிற்று. அவ்விதம் திரும்புவதற்கு முக்கிய காரணமாகவும் தூண்டுகோலாகவும் இருந்தவர்கள் ஜைன முனிவர்கள்.

இளம் பிராயத்தில் புலிகேசியும் அவன் சகோதரர்களும் வைஷ்ணவப் பற்றுள்ளவர்களாயிருந்தார்கள். புலிகேசி சிங்காதனம் ஏறுவதற்கு ஜைனர்கள் உதவி செய்த காரணத்தினால், புலிகேசிக்குச் சமண மதத்தில் அபிமானம் உண்டாயிற்று. எனவே, வாதாபியில் ஜைன முனிவர்களுக்கு விசேஷச் செல்வாக்கு ஏற்பட்டது. அவர்களுடைய முயற்சியினாலேயே கங்கபாடி மன்னன் துர்விநீதனுடைய மகளுக்கும் புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனனுக்கும் விவாகம் நடந்தது. இன்னும், ஜைன சமயத் தலைவர்கள் புலிகேசிக்கு "சத்யாச்ரயன்" என்னும் சிறப்புப் பட்டம் அளித்துக் கௌரவப்படுத்தினார்கள்.

காஞ்சி மகேந்திர சக்கரவர்த்தி ஜைன மதத்திலிருந்து விலகிச் சைவ சமயத்தை மேற்கொண்டபோது, நாடெங்கும் உள்ள ஜைனர்களின் உள்ளம் கொதிப்பை அடைந்தது. ஏனெனில், கல்வியிற் சிறந்த காஞ்சிமா நகரமானது வெகு காலமாகச் சமணர்களுடைய குருபீடமாக இருந்து வந்தது. காஞ்சியில் ஒரு பெரிய பகுதி — வேகவதி யாற்றுக்கு அப்பாலிருந்த பகுதி — 'ஜீன காஞ்சி' என்று அழைக்கப்பட்டு வந்தது. இன்னும், தென் பெண்ணை ஆற்றின் முகத்துவாரத்தின் அருகில் இருந்த பாடலிபுரம் என்னும் ஊரில் தென்னாட்டிலேயே மிகச் சிறந்த சமணப் பள்ளி புகழுடன் விளங்கி வந்தது. இப்படிப்பட்ட பிரதேசத்தில் சமணத்தின் செல்வாக்குத் தாழ்ந்து சைவம் ஓங்குவது என்பதைச் சமண சமயத் தலைவர்களால் சகிக்கக் கூடவில்லை.

இவர்களுடைய தூண்டுதலுடனே புலிகேசியின் ஏக சக்ராதிபத்ய வெறியும் சேர்ந்து, அவ்வீர மன்னன் இது வரையில் யாரும் கண்டும் கேட்டுமிராத பிரம்மாண்டமான சைன்யத்துடனே தென்னாட்டின் மேல் படையெடுப்பதற்குக் காரணமாயிற்று.

படையெடுப்பு சைன்யம் கிளம்பிய போது, வெற்றி முழக்கத்துடனே காஞ்சியில் பிரவேசித்து மகேந்திரனுக்குப் புத்தி புகட்டலாம் என்ற எண்ணத்துடன் ஜைன ஆச்சாரிய புருஷர்களும் சைன்யத்துடனே புறப்பட்டார்கள். ஆனால், தலை நகருக்கும் பாசறைக்கும் வித்தியாசம் அதிகம் என்பதையும், சத்யாச்ரய புலிகேசிக்கும் போர்த் தலைவன் புலிகேசிக்கும் மிக்க வேற்றுமை உண்டு என்பதையும் விரைவிலேயே அவர்கள் கண்டார்கள். தலைநகரிலே பூஜ்யபாதர், ரவிகீர்த்தி முதலிய ஜைன குருமார்களுக்குச் சக்கரவர்த்தியைக் காட்டிலும் அதிகமான மரியாதை நடந்தது. போர்க்களத்திலோ அவர்களைத் திரும்பிப் பார்ப்பவர்களோ, அவர்களுடைய யோசனையைக் கேட்பவர்களோ யாரும் இல்லை. உண்மையான சமயப்பற்று உடையவர்களான அந்த குருமார்கள் வைஜயந்தி பட்டணத்தைக் கொளுத்தக்கூடாது என்று சொன்னதைப் புலிகேசி அலட்சியம் செய்தபிறகு, அவர்கள் போர்க்களத்தில் இருக்கவே மனங் கொள்ளவில்லை. புலிகேசியிடம் சிறிது விவாதம் செய்து பார்த்த பிறகு, அவனிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பிச் சென்றார்கள்.



பாசறையின் வாசலிலும், உள்ளே ஆங்காங்கும் நின்ற வீரர்களின் தோற்றமும், அவர்களுடைய பேச்சின் பாஷையும், இந்த சைன்யம் பல்லவ சைன்யமாக இருக்க முடியாது என்று ஐயமறத் தெரிவித்தன.

"ஆஹா! பகைவர்களின் பாசறைதான் இது! இங்கே வந்து அகப்பட்டுக் கொண்டோமே? தப்பிச் செல்வதற்கு வழியே இல்லை போலிருக்கிறதே!" என்று பரஞ்சோதி எண்ணியபோது, அவனுடைய சப்த நாடியும் ஒடுங்கியது. சற்று முன் உள்ளத்தில் ஏற்பட்ட குதூகலமெல்லாம் நிராசையாக மாறியது.

அவன் உடம்பைப் பிணித்திருந்த கட்டுக்கள் அப்போது முன்னை விடப் பதின்மடங்கு அதிகமாக வலித்தன.

மனச் சோர்வினாலும் உடல் வலியினாலும் நிமிர்ந்து அவனால் நடக்கக் கூட முடியாமல் தள்ளாடவே, அவனை அவ்வீரர்கள் இழுத்துக் கொண்டு போக வேண்டியதாக நேரிட்டது.

அப்போது சற்றுத் தூரத்தில் அறிமுகமான முகம் ஒன்று தன்னை நோக்கி வருவதைப் பரஞ்சோதி கண்டான்.

அருகில் நெருங்கியதும் அந்த முகம் நேற்று முன்தினம் அவனுக்கு வழித்



பல்லவ சாம்ராஜ்யத்தின் கொடி, ரிஷபக் கொடியல்லவா? இந்தக் கொடிகளில் எல்லாம் காட்டுப் பன்றியின் உருவமல்லவா காணப்படுகிறது?

ஒரு வேளை இது வாதாபி சைன்யமாயிருக்குமோ? பல்லவ ராஜ்யத்தின் மீது படையெடுத்து வரும் சைன்யம் இதுதானா? — ஐயோ! இவ்வளவு பிரமாண்டமான படை பலமுள்ள பகையா பல்லவ ராஜ்யத்துக்கு ஏற்பட்டிருக்கிறது?

னுடைய பொங்கி எழுந்த உற்சாகத்தை மீண்டும் சந்தேகமாகிய நிழல் மறைத்தது. "இங்கே தண்டு இறங்கி யிருப்பது பல்லவ சைன்யந்தானா?" என்பதுதான் அந்த சந்தேகம்.

பாசறைக் கூடாரங்களின் மேல் பறந்து கொண்டிருந்த கொடிகளைப் பார்த்தபோது மேற் கூறிய சந்தேகம் எழுந்தது.

**பா**சறையின் முன் வாசலை அடைந்ததும், அவ் வீரர்கள் குதிரைகளின் மீதிருந்து கீழே இறங்கி, பரஞ்சோதியையும் கீழே இறக்கி விட்டு, அவனை நடத்தி அழைத்துச் சென்றார்கள்.

பாசறைக்குள்ளே புகுந்து சென்றபோது, பரஞ்சோதியின் சந்தேகம் உறுதியாயிற்று.

இடையிடையே அடித்திருந்த கூடாரங்கள் வெண்ணிற மணற் குன்றுகளைப்போல் தோன்றின. இன்னும் குதிரைகள், ஒட்டகங்கள், ரிஷபங்கள், ரதங்கள், வண்டிகள் கணக்கிலடங்காதவாறு எங்கெங்கும் காணப்பட்டன. சர்க்கரை இறைந்து கிடக்கும் இடத்தில் மொய்க்கும் எறும்புகளைப்போல், லட்சோப லட்சம் வீரர்கள் சில இடங்களில் நெருங்கியும், சில இடங்களில் பரந்தும், வெகு தூரத்துக்கு வெகு தூரம் காணப்பட்டார்கள்.

கூடாரங்களின் மேலே வரிசை வரிசையாகக் கொடிகள் பறந்துகொண்டிருந்தன. எல்லாவற்றுக்கும் நடுநாயகமாக ஒரு பிரம்மாண்டமான கொடி வானளாவிப் பறந்துகொண்டிருந்தது.

கொந்தளித்துக் கொண்டிருக்கும் சமுத்திரத்தை நெருங்கும்போது கேட்கும் 'ஹோ' என்ற பேரிரைச்சலைப்போல், இனந்தெரியாதபடி பல ஒலிகள் கலந்து எழுந்த பேரோசை அந்தப் பாசறையிலிருந்து வந்து கொண்டிருந்தது.

இந்தக் காட்சியைப் பார்த்த பரஞ்சோதியின் வாயிலிருந்து "ஆஹா!" என்ற சத்தம் எழுந்தது.

அங்கே தண்டு இறங்கியிருப்பது பல்லவ சைன்யந்தான் என்று எண்ணிய பரஞ்சோதியின் உள்ளத்தில், அப்போது அவனுடைய கட்டுண்ட நிலைமையையெல்லாம் மறக்கச் செய்துகொண்டு ஒரு பெரும் ஆர்வம் பூரித்து எழுந்தது.

அது என்ன ஆர்வமென்றால், மகத்தான வீரப் போருக்கு ஆயத்தமாகத் துடிதுடித்துக் கொண்டு நிற்கும் அந்த மகா சைன்யத்தில் தானும் ஒரு போர் வீரனாகச் சேர்ந்துவிட வேண்டும் என்பதுதான்.

அந்தகாரம் சூழ்ந்த இரவில் பிரயாணம் செய்பவன் வழி தெரியாமல் திகைத்துக் கொண்டிருக்கையில், திடீரென்று தோன்றிய மின்னலின் ஒளியிலே தான் போகவேண்டிய பாதையைக் கண்டு பிடிப்பதுபோல, பரஞ்சோதியும் தான் பிறவி எடுத்தது எதற்காக என்பதை அந்தக் கணத்தில் தெளிவாகக் கண்டு கொண்டான். ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதுவதற்காகவோ, தோத்திரப் பாடல்களை உருப்போட்டுப் பாடுவதற்காகவோ, கையில் சிற்றுளி கொண்டு கல்லைக் கொத்திக்கொண்டிருப்பதற்காகவோ, வர்ணங்களைக் குழைத்துச் சுவரில் சித்திரம் எழுதுவதற்காகவோ தான் பிறக்கவில்லை! கையில் வாளும் வேலும் கொண்டு போர் முனையில் நின்று, எதிரிகளின் தலைகளைப் பனங்காய்களைப் போல் உருட்டி, அவர்கள் நெஞ்சில் வேலைப்பாய்ச்சி, இரத்த வெள்ளத்தில் நீந்தி, வெற்றிச் சங்கு முழக்கி, புறமுதுகிட்டோடும் பகைவர்களை ஹதா ஹதம் செய்து விரட்டி, "வீராதி வீரன்" என்று உலகமெல்லாம் பாராட்டும்படி பெயர் எடுப்பதற்காகப் பிறந்தவன் தான் என்பதை உணர்ந்தான்!

இந்த எண்ணமானது பரஞ்சோதிக்கு எல்லையற்ற குதூகலத்தை உண்டாக்கிற்று. ஆயனர் வீட்டில் புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்திருந்து அவன் பார்த்த மகேந்திர சக்கரவர்த்தியின் கம்பீர உருவம் அவன் கண் முன்னால் எழுந்தது. அதோ வானளாவிப் பறக்கும் கொடியின் அடியில் இந்த மகத்தான சைன்யத்தின் பிரதம சேனாதிபதியான மகேந்திர சக்கரவர்த்தி வீற்றிருப்பார். அவர் முன்னிலையிலேதான் தன்னைக் கொண்டு போய் நிறுத்துவார்கள்.

சக்கரவர்த்தியின் சந்நிதியையடைந்ததும், அவர் பாதங்களில் நெடுஞ்சாங்கடையாக விழுந்து, "பிரபு! பல்லவேந்திரா! தங்களுடைய வீர மகா சைன்யத்தில் இந்தப் பட்டிக் காட்டு அறியாச் சிறுவனையும் சேர்த்துக் கொள்ள அருள் புரிய வேணும்!" என்று வேண்டிக் கொள்வதென்று பரஞ்சோதி தீர்மானித்தான். சித்திரக் கலையுமாச்சு! வர்ணச் சேர்க்கையுமாச்சு! ஆயனரும், நாகநந்தியும் எக்கேடு கெட்டாவது போகட்டும்! — சக்கரவர்த்தி கேட்கும் பட்சத்தில், உடனே நாகநந்தியின் ஓலையை அவர் பாதங்களில் சமர்ப்பித்து உண்மையை உள்ளபடி சொல்லிவிட வேண்டியது.

இவ்விதமெல்லாம் பரஞ்சோதி எண்ணமிட்டுக் கொண்டே பாசறையை நெருங்கியபோது, அவ




## அத்தியாயம் 41

## பாசறை

**பு**த்த விஹாரத்திலிருந்து புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் அக்குதிரை வீரர்களில் மூன்று பேர் பரஞ்சோதிக்கு முன்னாலும், மூன்று பேர் பின்னாலுமாகி, பரஞ்சோதியை நடுவிலேயே விட்டுக்கொண்டு சென்றார்கள்.

பொழுது நன்றாய் விடிந்த பிறகு, பரஞ்சோதி அவர்களுடைய தோற்றத்தைக் கவனித்தான். அவர்கள் திடகாத்திரமுள்ள ஆஜானுபாகுவான மனிதர்கள் என்று தெரிந்து கொண்டான்.

அவர்கள் யாராயிருக்கும்? எங்கேயிருந்து எங்கே போகிறார்கள்? என்ன காரியமாகப் போகிறார்கள்? இந்தப் பிரதேசங்களில் எல்லாம் சைன்யங்களின் நடமாட்டம் அதிகம் உண்டு என்று பரஞ்சோதிக்குத் தெரிந்திருந்தது. இந்த வட பெண்ணையாற்றங் கரையிலேதான் எங்கேயோ ஓரிடத்தில் பல்லவ சைன்யங்கள் தண்டு இறங்கியிருக்கின்றன. வாதாபியின் சைன்யங்களும் இந்த நதியை நோக்கித்தான் வடமேற்குத் திசையிலிருந்து வந்து கொண்டிருக்கின்றன என்று மகேந்திர விடுதியின் தலைவன் கூறியதும் பரஞ்சோதிக்கு ஞாபகம் வந்தது.

இந்த வீரர் ஏதோ ஒரு சைன்யத்தைச் சேர்ந்தவர்களாய்த் தான் இருக்க வேண்டும். ஏதோ முக்கியமான யுத்த காரியமாகத்தான் போய்க் கொண்டிருக்கிறார்கள். இவர்களுடன் தன்னை ஏன் அந்த புத்த பிக்ஷு சேர்த்து அனுப்பினார்?

நேரமாக ஆக, பரஞ்சோதியின் மனக் கலக்கம் அதிகமாயிற்று. அவன் அந்த வீரர்களுக்கு முன்னால் போகவோ, பின்னால் போகவோ முயன்ற போதெல்லாம், அவர்கள் அதற்கு இடங் கொடாமல் அவனை நடுவிலேயே விட்டுக் கொண்டு போனார்கள். இதைப் பார்க்கப் பார்க்க, அவன் உள்ளத்தில் தனக்கு இவர்கள் வழி காட்டி அழைத்துப் போகிறார்களா, அல்லது சிறைப்படுத்திக் கொண்டு போகிறார்களா என்ற சந்தேகம் உதித்தது. மகேந்திர சக்கரவர்த்தியைப் பற்றி நாகநந்தியடிகள் எச்சரித்தது ஞாபகம் வந்தது. ஒருவேளை இதெல்லாம் அந்தச் சித்திரகாரப் புலியின் சூழ்ச்சியாக இருக்குமோ?

இன்னும், முதல் நாள் மகேந்திர விடுதியில் நடந்த காரியங்களையும், வஜ்ரபாஹுவின் விசித்திரமான நடவடிக்கைகளையும் இப்போது பரஞ்சோதி எண்ணிப் பார்க்கையில், அவன் உள்ளத்தில் என்ன வெல்லாமோ சந்தேகங்கள் உதித்தன.

ஸ்ரீ பர்வதம் வடக்கே கிருஷ்ணா நதிக் கரையில் இருக்கிறதென்பது பரஞ்சோதிக்குத் தெரியும். ஆனால் அதிகாலையில் கிளம்பியதிலிருந்து அவர்கள் மேற்குத் திசையை நோக்கியே போய்க் கொண்டிருந்தார்கள்.

ஒருவேளை கொஞ்ச தூரம் மேற்கே போன பிறகு பாதை வடக்கு நோக்கித் திரும்பலாம் என்று முதலில் அவன் எண்ணினன். ஆனல், நெடுகிலும் அவர்கள் மேற்கு நோக்கியே போய்க் கொண்டிருந்தார்கள்.

குதிரைகளின் களைப்புத் தீர்வதற்காக அவர்கள் நின்ற இடங்களில், பரஞ்சோதி அந்த வீரர்களுடன் பேச்சுக் கொடுக்க முயன்றது ஒன்றும் பலிக்கவில்லை.

சூரியன் உச்சி வானத்திற்கு வரும் வரையில் பிரயாணம் செய்த பிறகு, பரஞ்சோதி தான் உண்மையில் சிறையாளியா இல்லையா என்பதை நிச்சயமாய்த் தெரிந்துகொள்ள விரும்பினன். அவ்விடம் வடக்கு நோக்கித் திரும்பிய பாதையில் அவன் தன் குதிரையைத் திருப்பினன்.

கண் மூடித் திறக்கும் நேரத்தில் அந்த ஆறு குதிரை வீரர்களும் அவனைச் சூழ்ந்து நிற்பதைக் கண்டான். அவர்களுடைய வேல்களின் முனைகள் அவனுடைய குதிரை மீது உராய்ந்து கொண்டிருந்தன.

எண்ணெய் ஊற்றி ஆயத்தமாய் வைத்திருக்கும் தீபத்தின் திரியானது அதன்மீது தீப் பட்டதும் சுடர் விட்டு எரியத் தொடங்குவதுபோல், பரஞ்சோதியின் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த ஆத்திர உணர்ச்சி இப்போது கொழுந்து விட்டெரியத் தொடங்கியது. கோபத்தினுல் அவனுடைய இரத்தம் கொதித்தது.

கையிலே வேலை எடுத்தான். அதை வீசுவதற்காக ஓங்கினன்.

ஆகா! என்ன ஏமாற்றம்! ஓங்கிய வேல் எங்கேயோ போய் விழுந்தது. வேலுக்கு உடையவனும் தொப்பென்று தரையில் விழுந்தான். எப்படி விழுந்தோம் என்பதே முதலில் பரஞ்சோதிக்குத் தெரியவில்லை. அப்புறம் தன் உடம்பின் மீது கயிறு ஒன்று சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டான். ஆ! அந்த வீரர்களில் ஒருவன் சுருக்குப் போட்ட கயிற்றைத் தன் மீது எறிந்து, தன்னைக் கீழே இழுத்துத் தள்ளி விட்டானென்பதை அறிந்தான்.

இரண்டாவது தடவை இவ்விதம் சூழ்ச்சியினுல் தான் வெல்லப்பட்டதை நினைத்தபோது, பரஞ்சோதிக்கு ஒரு பக்கம் வெட்கமும், இன்னொரு பக்கம் ஆத்திரமும் பொங்கின.

அவனுடைய குதிரையானது தன் எஜமானனுக்கு ஏதோ ஆபத்து வந்து விட்டதென்றும், இனிமேல் அவனுக்குத் தன்னுல் பயனில்லையென்றும் உணர்ந்து கொண்டது போல், வந்த வழியே திரும்பி ஓடிக் கொண்டிருந்ததை அவன் பார்த்தான்.

தப்பிச் செல்வதற்கு இவ்விதம் வழியே யில்லாமற் போகவே, "இனி அந்த வீரர்களிடம் போராடுவதில் பயனில்லை, நடந்தது நடக்கட்டும்" என்று பரஞ்சோதி சும்மா இருந்தான்.

அவன் சுயமாக எதுவும் செய்வது சாத்தியமும் இல்லையென்று விரைவில் தெரிந்துவிட்டது. அந்த வீரர்களில் மூவர் குதிரை மீதிருந்து இறங்கி வந்து, பரஞ்சோதியின் கரங்களை முதுகுப் பக்கம் சேர்த்து, பின்கட்டு முன்கட்டாகக் கட்டினுர்கள்.

அந்த ஆறு குதிரைகளுக்குள்ளே அதிக வலிவும் ஆகிருதியும் உள்ள குதிரையின்மேல் அவனை ஏற்றினுர்கள். அவனுக்குப் பின்னுல், அவ்வீரர்களில் ஒருவனும் உட்கார்ந்து கொண்டான்.

மறுபடியும் குதிரைகள் மேற்குத் திசையை நோக்கிச் சென்றன.

* * *

அஸ்தமிக்க ஒரு ஜாமம் இருக்கும் பொழுது, பரஞ்சோதி அவனுக்கு முன்னுல் ஓர் அபூர்வமான காட்சியைப் பார்த்தான்.

அப்போது அவர்கள் சென்ற பாதையானது, வரவர மேடாகி வந்த பீடபூமியின் உச்சியை யடைந்திருந்தது. அங்கிருந்து பார்க்கும்போது வெகு தூரத்துக்கு வெகு தூரம் சமவெளிப் பிரதேசமாகக் காணப்பட்டது.

அந்தப் பிரதேசத்தில் கண்ணுக் கெட்டிய தூரம் சைன்யம் தண்டு இறங்கியிருந்த காட்சி தென்பட்டது.

ஆயிரக் கணக்கான யானைகள் கருங் குன்றுகளைப்போல் வரிசை வரிசையாக நின்றன. அந்தக் கருங் குன்றுகளுக்கு

# ஆகாச வெடி

"சென்னைக் கவர்னர் பூண்டி நீர்த் தேக்கத்தைத் திறந்து வைத்தபோது கமிஷனர் மேயரைப் பாராட்டினார். மேயர் இஞ்சினியரைப் பாராட்டினார். இஞ்சினியர் கவர்னரைப் பாராட்டினார். கவர்னர் மற்றவர்களைப் பாராட்டினார்."

—ஒரு செய்தி.

அங்கே ஒருவேளை ஸ்ரீ சத்தியமூர்த்தி சூக்ஷ்ம சரீரத்தில் வந்திருந்தால், இவர்கள் எல்லாரையும் சேர்த்துத் தாலாட்டி யிருப்பார்!

★

"பகவத் கீதை புஸ்தகம் தோன்றிய தால் இந்தியாவில் யாராவது பல னடைந்தார்களா?"

—ஒரு தலையங்கம்.

ஏன் அடையவில்லை? புஸ்தக வியா பாரிகள் வேண்டிய பலனை அடையத் தான் செய்கிறார்கள்!

★

"வைஸராய் வேவலுடைய மகன் மோகாங்கில் எதிரிகளுடன் போர் புரிந்ததில் பலத்த காயமடைந்து தமது இடது கையை இழந்து விட்டார். வைஸராய் தமது மகனைப் போய்ப் பார்த்து விட்டு வந்தார்."

—புது டில்லி செய்தி.

எதிரிகளை இன்னும் ஒரு கை பார்த்தே விடுகிறேன் என்று மகன் தகப்பனிடம் கூறியிருப்பார் என்று நம்புகிறோம்.

★

"நேற்று புரசைவாக்கம் ஹைரோடில் ஹைதர் என்பவர் நடு ரோடிலேயே மூர்ச்சை போட்டுக் கீழே விழுந்தார்."

—சென்னைச் செய்தி.



"எதிரில் எங்காவது உளுந்து மூட்டையைக் கண்டாரா?" என்று ஒரு கிரகஸ்தர் கேட்கிறார்.

# சோதா கடிதம்

ஹிந்து சர்க்காருக்கு ஸ்ரீமான் வரதட்சிணை எழுதிக் கொண்டது:—

போயும் போயும் இந்தப் பெண்ணைப் பெற்றவர்களின் மீது உங்களுக்கு என் இப்படி வஞ்சமோ தெரியவில்லை. இல்லா விட்டால், நீங்கள் என் வரதட்சிணை எதிர்ப் புச் சட்டமென்றும், சங்கமென்றும், ஆரம் பித்து அவர்கள் பிராணனை வாங்கப் பிரயத் தனம் செய்யப் போகிறீர்கள்?

இந்த யுத்தம் ஆரம்பித்து, இதுவரையில் நான்தான் 'பிளாக் மார்க்கெட்'டில் சொஞ்ச மிருந்தேன். இப்பொழுது என்னையும் அந்தக் கள்ள மார்க்கெட்டில் சேர்த்து, பின்னை வீட்டுக்காரர்கள் கொள்ளை லாபம் அடிக்க நீங்கள் சதி செய்கிறீர்கள்! ஏற்கெனவே என்னைக் கண்டு நடுங்கும் பெண்ணைப் பெற்றவர்களுக்கு, மேற்படி நிலைமையிலிருந்தும் நீங்கள் பின் வாங்கி விடுவீர்களென்று நான் பெரிதும் நம்பு கிறேன். இப்படிக்கு,

ஸ்ரீமான் வரதட்சிணை.

கல்கத்தா சர்வ கலாசாலையாருக்கு, பஞ்சப் பேய் பரம குஷியுடன் எழுதிக் கொண்டது:—

இந்தியாவிலேயே தாங்கள்தான் முதன் முதலில் சமையலைப் பற்றிப் போதிக்கப் போகிறீர்களாமே! பேஷ், சரியான யோசனை! போதியுங்கள், போதியுங்கள்! சமையலைப் பற்றி மட்டுமல்ல; "சாப்பிடு வது எப்படி?" என்பதைப் பற்றியும் போதி யுங்கள்! அப்புறம், "அஜீரணம் வந்தால் என்ன செய்வது?" என்பதைப் பற்றியும் அவர்களுக்குச் சொல்லிக் கொடுங்கள்! இந்தச் சமயத்தில் மேற்சொன்ன தெல்லாம் அவசியம் வேண்டியதுதான்!

ஆனால், உங்களை நான் ரொம்பவும் கேட்டுக் கொள்வது என்னவென்றால், உணவுப் பொருள் உற்பத்தி, அது, இது என்றெல்லாம் சில பைத்தியக்காரர்கள் சொல்லுகிறார்களே, அம்மாதிரி விஷயங் களைப் பற்றி மட்டும் இந்தச் சமயத்தில் ஒன்றுமே போதிக்க வேண்டாம்!

இப்படிக்கு,

பஞ்சப் பேய்.

---

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழில் வெளியான "வேண்டாம்" என்னும் கால க்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: உ. கல்யாண சுந்தரம், திருமலைராயன் பட்டணம்.

கடவுளே! — அந்தத் தேசம் அடையக் கூடிய கஷ்டங்களுக்கு நரகத்தின் கஷ்டங்கள் எல்லாம் உறை போடக் காணமாட்டா!

இந்த இரண்டாவது போர்முனையில் யுத்தம் செய்கிறவர்கள் ஒரு பக்கத்தில் ஜெர்மன் நாஜிகள்; இன்னொரு பக்கத்தில் ஆங்கிலோ - அமெரிக்கர்கள். ஆனால் அழிந்து நாசமாகிறதோ பிரான்ஸ் தேசம்!

இதை நினைக்கும்போது விதியின் விசித்திரத்தை எண்ணிச் சிரிக்கத்தான் தோன்றுகிறது.

*　　　*　　　*

சரி; பிரான்ஸைக் குறித்துப் பரிதாபப்பட்டுக் கண்ணீர் விட்டு விட்டோமல்லவா? எல்லாப் பரிதாபத்தையும் கண்ணீரையும் பிரான்ஸுக்கே செலவழித்துவிட வேண்டாம்.

ஏனெனில், பிரான்ஸைவிடப் பரிதாபப்படக் கூடியதான தேசம் ஒன்று இந்த உலகத்திலே இருக்கிறது.

அந்தத் தேசத்தின் பெயர்தான் இந்தியா!

இந்தியாவின் மீது படையெடுப்போ, மறு படையெடுப்போ இல்லாமலே போகலாம். எதிரி விமானத்தையோ, வெடிகுண்டு வெடிப்பதையோ இந்தியர்கள் கண்ணால் பார்க்காமலே யுத்தம் முடிந்து விடலாம்.

ஆனாலும், நம்முடைய நிலைமை பிரான்ஸின் நிலைமையைவிடப் பரிதாபகரமானதுதான்.

பிரான்ஸ் இன்றைக்குச் சொல்ல முடியாத பயங்கரக் கஷ்டங்களுக்கு ஆளாகியிருக்கிறது. பிரான்ஸைப் போலவே இன்னும் பல ஐரோப்பிய தேசங்கள் இந்த யுத்தத்தில் கஷ்டப்பட்டிருக்கின்றன; இன்னமும், யுத்தம் முடிவதற்குள் கஷ்டப்படப் போகின்றன.

ஆனால், யுத்தம் முடிந்ததும் அவ்வளவு தேசங்களும் சுதந்திரத்தை அநுபவிக்கப் போகின்றன.

ஜயித்த தேசங்கள் மட்டுமல்லாமல் தோற்ற தேசங்கள் கூடச் சுதந்திரம் அநுபவிக்கத்தான் போகின்றன.

தோற்ற தேசங்களில் ஆயுத உற்பத்தி முதலியவைகளைப் பற்றிச் சில நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்துவார்களே தவிர, அவற்றின் சுதந்திரத்தை அபகரிப்பது பற்றிப் பேச்சே உண்டாகாது.

யுத்தத்திற்குக் காரணமாகக் கருதப்பட்ட கட்சியை அரசியலிலிருந்து தள்ளி விட்டு, இன்னொரு கட்சியார் அதிகாரத்துக்கு வருவார்கள்.

சில தேசங்களில் எல்லைக் கோடுகளை மாற்றி அமைப்பார்கள்.

அவ்வளவுதான்; மற்றப்படி ஐரோப்பாவில் ஒவ்வொரு தேசமும் சுதந்திரத்துடனேயே இருக்கும்.

யுத்தம் முடிந்ததும் புனர் நிர்மாண வேலையில் அதி தீவிரமாக ஈடுபடுவார்கள்.

யுத்தத்தின்போது பட்ட கஷ்டங்களெல்லாம், செத்தவர்கள் போக மற்றவர்களுக்கு, உறுதியையும், உழைப்புத் திறமையையும் அதிகமாக வளர்த்திருக்கும். அவர்களுடைய அறிவும் அதிகக் கூர்மையடைந்திருக்கும்.

பத்து வருஷத்துக்குள் ஒவ்வொரு ஐரோப்பிய தேசமும் மறுபடியும் ஒரு யுத்தத்தை ஆரம்பிக்கும் வலிமையையும் வசதியையும் அடைந்துவிடும்.

ஆனால், யுத்த பயங்கரங்களை அநுபவியாத இந்தியாவோ, பழைய பெத்தானே பெத்தான் என்று சுதந்திரமடையாமல் அன்னியர் ஆட்சிக்கு உட்பட்ட நாடாக இருக்கும்.

ஐரோப்பியரும் அமெரிக்கரும் இங்கே தங்கள் உற்பத்திப் பொருள்களைக் கொண்டுவந்து தள்ளுவார்கள். அவர்களுடைய சாமான்களை வாங்குவதற்கே நாற்பது கோடி இந்தியர்கள் பிறந்தவர்களாகக் கருதப்படுவார்கள்.

இதுதான் இப்போது இந்தியாவை ஆளும் பிரிட்டிஷாரின் உத்தேசம் என்பது பல முகாந்திரங்களினால் நன்கு தெரிகிறது.

அந்த உத்தேசம் பலிக்காமல் போவதற்கு என்ன வழிகள் உண்டோ, அவற்றை நமது தேசத் தலைவர்கள் இப்போதாவது தீர்க்காலோசனை செய்து கண்டு பிடிக்க வேண்டும்.

பிரிட்டிஷ்-அமெரிக்கர் இந்த யுத்தத்தில் வெற்றியடையப் போவது நிச்சயம் என்று வைத்துக் கொண்டுதான் அந்த வழிகளைத் தேட வேண்டும்.

இல்லாவிடில், பழைய தவறுகளை மீண்டும் மீண்டும் செய்து கொண்டிருப்பதாகவே முடியும்.

அமெரிக்காவின் உதவி என்றால் சாமானியமல்ல.

ஐரோப்பா கண்டத்தைப்போல் பன் மடங்கு பெரிய கண்டம் அமெரிக்கா கண்டம். இயற்கை வளத்திலும், செயற்கை வளத்திலும் அபார முன் னேற்ற முடையது. அந்தப் பெரிய கண்டத்தின் பூரண சக்தியையும் பிரஸி டெண்ட் ரூஸ்வெல்ட் இந்த யுத்தத்தில் ஜயிப்பதற்காகத் திரட்டித் தந்து கொண்டிருக்கிறார்.

லட்சக் கணக்கான ஆகாச விமானங் களையும், ஆயிரக் கணக்கான கப்பல் களையும், பதினாயிரக் கணக்கில் டாங்கி களையும் பீரங்கிகளையும் தயாரித்து அனுப்பிக் கொண்டே இருக்கிறார்.

இவ்வளவுக்கும் மேலாக மேற்படி யுத்தக் கருவிகளையெல்லாம் உபயோகப் படுத்துவதற்குப் பல லட்சம் யுத்த வீரர்களையும் அனுப்பி வருகிறார்.

இவ்வளவு படை பலத்தையும் ஆயுத பலத்தையும் வைத்துக் கொண்டு இரண் டாம் போர்முனையை இன்னும் தள்ளிப் போட்டிருந்தால்தான் மூட்டாள்தன மாக யிருக்குமே தவிர, இப்போது ஆரம்பித்திருப்பதில் ஆச்சரிய மெதுவும் இல்லை.

* * *

இரண்டாம் போர்முனை ஆரம் பிக்க வேண்டியதுதான். ஆரம்பித்தும் விட்டார்கள். ஆனாலும், ஆரம்பத்தில் அது பற்றிய கவலை இருக்கத்தான் இருந்தது.

படையெடுப்பை எதிர்ப்பதற்கு ஜெர்மானியர் என்ன இந்திரஜித்து வேலைகளைத் தயாரித்து வைத்திருக் கிறார்களோ என்ற பீதி ஓரளவு இருந்தது.

அதுவும் இப்போது தீர்ந்துவிட்டது.

ஹிட்லர் வெகு காலத்துக்கு முன்பே பயமுறுத்திய "இரகசிய ஆயுதம்" இப்போது வெளியாகி விட்டது.

விமானம் இல்லாமல், விமான ஓட்டி யில்லாமல், தானாகவே ஆகாயத்தில் பறந்து சென்று வெடிக்கும் ராட்சஸ குண்டுகளை ஜெர்மானியர் இத்தனை காலமும் இரகசியமாக வைத்திருந்து இப்போது பிரயோகித் திருக்கிறார்கள்.

ஆனால், அநேகர் எண்ணியதுபோல் அது அவ்வளவு பயங்கரமான ஆயுதம் இல்லை; எதிர்த்து அழிக்கக் கூடியது தான் என்று தெரிகிறது.

பறக்கும் குண்டாயிருந்தாலும், அதைத் தரையிலிருந்துதான் கிளப்பி விட வேண்டுமல்லவா?

அப்படி அவற்றைக் கிளப்பிவிடுவதற் காக ஏற்பட்ட இடங்களிலே குண்டு போட்டு அழித்துவிட்டால், அந்த அபாயத்தை ஒழித்துவிடக் கூடு மல்லவா?

இந்தக் காரியத்தை பிரிட்டிஷ் - அமெ ரிக்க விமானங்கள் இப்போது அதி தீவிரமாகச் செய்துகொண்டிருக் கின்றன.

எனவே, ஜெர்மானியரின் பறக்கும் வெடி குண்டு, இந்திரஜித்து கடைசி கடைசியாகச் செய்த நிகும்பலை யாக மாகவே முடியும் என்று ஊகிப்பது தவறாகாது.

* * *

இரண்டாம் முனை யுத்தம், நாஜி களின் நிகும்பலை யாகம், — இவை களைப் பற்றி நினைக்கும்போது, பிரான் ஸின் பரிதாப நிலைமையைப் பற்றி நமக்கு ஞாபகம் வருகிறது.

இரண்டாம் போர்முனை ஜெர்மனி யின் எல்லையை அடைவதற்குள்ளே பிரான்ஸ் தேசம் அடையப் போகிற கதியை நினைக்கவே பயங்கரமா யிருக்கிறது.

இருதரப்பிலும் அக்கினி மழையைக் கக்குவதினாலே வீடு வாசல்கள் நாச மாவதுடன், ஒரு புல் பூண்டு இல்லா மல் அழிந்து பிரான்ஸின் பெரும் பகுதி ஒரே மயான பூமியாக மாறிவிடு மென்று தோன்றுகிறது.

ஒரு தேசத்துக்கு ஏற்படக் கூடிய விபத்துக்களுக்குள்ளே கொடிய விபத்து, அந்த நாட்டின்மீது இன் னொரு தேசத்து சைன்யங்கள் படை யெடுத்து வந்து கைப்பற்றிக் கொள் வதே யாகும்.

ஆனால் அதைவிடப் பெரிய கொடிய விபத்து ஒன்று இருக்கிறது. அது என்ன வென்றால், அப்படிக் கைப் பற்றிக் கொண்ட படைகளை விரட்டி அந்தத் தேசத்தை மீட்பதற்காக மூன் றாவது தேசத்துப் படைகள் வந்திறங்கு வதுதான்.

இந்தக் காலத்துத் தீ மழை யுத்த முறையினால், ஒரு தேசத்தின்மீது ஒரு தடவை படையெடுப்பு நேர்ந்தாலே, அது நரக வேதனை அநுபவிப்பதற்குப் போதுமானது. இரண்டாவது தடவை யும் படையெடுப்பு நேருமானால்,

அன்றைய தினமே ஹிட்லருடைய ஜாதகத்தில் எட்டாம் வீட்டில் சனி பிரவேசித்திருக்க வேண்டும்!

அன்றைய தினமே, இந்த யுத்தத்தின் முடிவு என்ன ஆகும் என்பதும் நிச்சயமாகி விட்டது.

அநேகம் பேருக்கு அது அப்போது தெளிவாகத் தெரியவில்லை.

"மூன்றே மாதத்தில் ருஷியா நிர்மூலமாகி விடும்!" என்று முட்டாள்தனமாக நம்பியவர்களும் உண்டு.

ஆனால், காரண காரியங்களை யோசித்துப் பார்க்கக் கூடியவர்களுக்கு அப்போதே யுத்தம் எப்படி முடியும் என்று தெரிந்து விட்டது.

அதனால்தான் இந்தியாவில் சிலர், "ருஷியா யுத்தத்தில் சேர்ந்து விட்டபடியால் நிலைமை மாறி விட்டது; நம்முடைய யுத்தக் கொள்கையையும் மாற்றிக்கொள்ள வேண்டும்" என்று சொன்னார்கள்.

இதைப் பெரும்பாலோர் ஒப்புக் கொள்ளவில்லை.

"ருஷியா நமக்கு என்ன சாதித்து விட்டது? ருஷியாவின் உதவிக்கு நாம் ஏன் போகவேண்டும்?" என்று அசட்டுத் தனமாய்க் கேட்டார்கள்.

"ருஷியாவின் உதவிக்காக அல்ல; நம்முடைய உதவிக்காகத்தான். ஜயிக்கிற கட்சியில் சேர்வது நமக்கு நாமே உதவிசெய்து கொள்வதாகும்" என்று சொன்னவர்களைப் பார்த்து மற்றவர்கள் சிரித்தார்கள்.

இன்றைய தினம் அவர்களே ருஷியாவின் மகத்தான வெற்றிகளைப் பார்த்து அசட்டுச் சிரிப்புச் சிரிக்கிறார்கள்!

* * *

மூன்று வருஷ காலம் உலகமெல்லாம் பிரமிக்கும்படி ருஷியர்கள் நடத்திய வீரப் போரினால்தான் இன்று சர்ச்சில் யுத்த முடிவைப் பற்றி இவ்வளவு நம்பிக்கையுடன் பேசுவது சாத்தியமாயிருக்கிறது.

ஆயிரம் மைல் தூரம் உள்நாட்டில் பிரவேசித்திருந்த ராட்சஸ நாஜிப் படைகளையெல்லாம் விரட்டியடித்துக் கொண்டு வந்து 1939-ம் வருஷத்திய ருஷிய எல்லையில் இன்று ருஷியாவின் வீரப்படைகள் நிற்கின்றன.

நல்ல சமயம் பார்த்து ஜெர்மனிக்குள்ளே பிரவேசிப்பதற்கு ஆயத்தமாக அவை நிற்கின்றன.

இதற்கிடையில், வடக்கே இருந்து கொசு உபத்திரவத்தை ருஷியா இப்போது தீர்த்துக் கொண்டிருக்கிறது.

பின்லாந்தைத்தான் சொல்கிறோம்.

இந்த பின்லாந்தின்மேல் ருஷியா முன்னொரு தடவை படையெடுத்து, ஒரு வருஷம் திண்டாடித் திணறுவதாகப் பாசாங்கு செய்து, ஹிட்லர் உள்பட உலகத்துக்கே நாமம் போட்டதை பிரசித்தியானது.

இனிமேல், அத்தகைய இராஜதந்திர வேலைக்கு அவசியமில்லை.

எனவே, அசைக்க முடியாத மானர்ஹீம் அரண் தவிடுபொடியாகிவிட்டது.

பின்லாந்துக்குள் ருஷிய சைன்யங்கள், தார் ரோட்டில் கார் போவது போல், தங்கு தடையில்லாமல் போய்க் கொண்டிருக்கின்றன.

ருஷியாவைப் பற்றிய வரையில், யுத்தம் ஜயமாக முடிந்து விட்டது என்றே சொல்லலாம். அதை நீடித்த ஜயமாகச் செய்துகொள்ள வேண்டிய காரியந்தான் பாக்கியிருக்கிறது.

* * *

சரி; கிழக்கு அரங்கத்திலிருந்து மேற்கு அரங்கத்துக்கு வருவோம். அதாவது முதல் போர் முனையிலிருந்து இரண்டாம் போர்முனைக்கு வருவோம்.

இப்போது பிரான்ஸில் நடக்கும் யுத்தமானது இரண்டாம் முனை யுத்தந்தான் என்று ஏறக்குறைய ஏற்பட்டு விட்டது. 'செர்பூர்க்' துறைமுகம் பிடிபட்டு விட்டால், நிச்சயமாகவே சொல்லிவிடலாம்.

மூன்று வருஷத்துக்கு முன்னால் ஹிட்லர் ருஷியாவில் காலடி வைத்த போதே, வேறு எந்த பலம் யாரிடமிருந்தாலும் அதிர்ஷ்ட பலம் மட்டும் பிரிட்டிஷ் தரப்பிலேதான் என்று ஏற்பட்டு விட்டது.

மூன்று வருஷத்துக்கு முன்பு பிரிட்டனுடைய நிலைமையை 'டன்கெர்க்' என்ற வார்த்தையாலும், இப்போதைய நிலைமையை 'செர்பூர்க்' என்ற வார்த்தையாலும் குறிப்பிடலாம்.

அப்போது 'டன்கெர்க்' வேலை செய்த பிரிட்டிஷார் இப்போது 'செர்பூர்க்' வேலை செய்கிறார்கள்!

மூன்று வருஷத்தில் அவர்களுடைய பலம் அவ்வளவாக விருத்தியடைந்திருப்பதுடன் அமெரிக்காவின் உதவியும் சேர்ந்திருக்கிறது.

# பயமுறுத்துகிறார்!

நமது அன்பார்ந்த பிரதம மந்திரி சர்ச்சில் நம்மைப் பயமுறுத்துகிறார்!

திடுதிப்பென்று ஒரு ஆயிரம் டன் செய்திக் குண்டை நம் தலையிலே தூக்கிப் போடுகிறார்!

“உங்களுக்கு நான் இரத்தத்தையும் வியர்வையையும் கண்ணீரையும் அழுகையையும்தான் தரமுடியும்; வேறு வாக்குறுதி தரமுடியாது!” என்று ஐந்து வருஷமாகச் சொல்லி வந்துவிட்டு, இப்போது திடீரென்று, “மண்டை பத்திரம்! வெற்றியைத் தூக்கி உங்கள் தலையில் ஒரே போடாய்ப் போடப் போகிறேன்!” என்கிறார்.

இந்த வருஷம் கோடை காலத்திலே யுத்தம் முடிந்து விடலாம் என்று ஆசை காட்டுகிறார்!

இந்த ஆசை வார்த்தையைக் கேட்டு நாம் மூர்ச்சையடைவதற்கு முன்னால், ஆகாயத்தில் மரண தேவன் ‘ஹா ஹா!’ என்று ஒரு ஹரிகேன் சிரிப்புச் சிரிக்கும் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிடுகிறோம்.

சிரிப்பின் சத்தத்தோடு கலந்து, “எந்த யுத்தம் முடியப் போகிறது?” என்னும் அபசகுனக் குரல் ஒலியும் கேட்கிறது.

இந்த யுத்தந்தானே முடியும்? முடிந்து போகட்டும்! அடுத்த யுத்தம் தானே வருகிறது! — என்ற திட நம்பிக்கை யுடனே தான் யமதர்ம ராஜா அவ்வாறு சிரிக்கிறார்.

சென்ற யுத்தத்தில் ‘டாங்கி’ என்னும் இரகசிய ஆயுதத்தை ஜெர்மானியர் கண்டு பிடித்தார்கள். ஆனால் அந்த ஆயுதத்தைப் போன யுத்தத்தில் பூராவும் பரிசோதித்துப் பார்க்க முடியவில்லை. அதன் பூரண சக்தியும் இந்த யுத்தத்திலே தான் நன்றாகப் பயன்பட்டு வருகிறது.

அதுபோலவே இந்த யுத்தத்தின் கடைசியிலும் ஜெர்மானியர் ஒரு இரகசிய ஆயுதத்தைக் கண்டு பிடித்துப் பிரயோகித்திருக்கிறார்கள்.

கோடைகாலத்தில் யுத்தம் முடிகிறதாயிருக்கும் பட்சத்தில், மேற்படி ஆயுதம் இந்த யுத்தத்தில் பூரணமாய்ப் பயன்பட்டதாகாது!

எனவே, பறக்கும் குண்டின் பரிபூரண சக்தியையும் பரீட்சை பார்ப்பதற்கு அடுத்த யுத்தம் ஒன்று சீக்கிரத்திலேயே வந்துதான் தீர வேண்டுமல்லவா?

இவ்விதம் அடுத்த யுத்தம் எப்படியும் வருமென்று யமதர்ம ராஜா கனவு கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கையில், நமக்கு இந்த யுத்தம் முடியப் போகிறது என்ற எண்ணமே அளவில்லாத குதூகலத்தை உண்டாக்கி மெய் சிலிர்க்கும்படி செய்கிறது.

சர்ச்சில் வாக்கு நிறைவேறி விட்டால், கூடிய சீக்கிரம் உணவுப் பஞ்சம் தீர்ந்து, ஹோட்டல்களில் இட்லியும் தோசையும் யதேஷ்டமாய்க் கிடைக்குமல்லவா என்று எண்ணும் போது, நம்மை என்னமோ செய்கிறது!

* * *

சாதாரணமாய், யுத்த விஷயங்களில் சர்ச்சில் ஒன்றைச் சொன்னால், அதற்கு அப்பீல் கிடையாது.

அவருடைய பேச்சை நாம் தாராளமாய் நம்பலாம்.

ஆனாலும், இத்தனை காலமும் உற்சாகம் தராதவகையில் இரத்தத்தையும், கண்ணீரையும், அட்லாண்டிக் சாஸனத்தின் அபத்தத்தையும் பற்றியே பேசி வந்தவர், இப்போது இவ்வளவு நம்பிக்கையுடன் “யுத்தம் முடிந்துவிடும்; இந்தக் கோடை காலத்திலேயே முடிந்துவிடும்!” என்று தைரியமாய்ச் சொல்வதின் காரணம் என்னவென்பதை நாம் ஆராயவேண்டும்.

சர்ச்சில் தைரியத்துக்குக் காரணம் இப்போது திடீரென்று ஏற்பட்டு விடவில்லை. மூன்று வருஷத்துக்கு முன்னாலேயே ஏற்பட்டு விட்டது.

ஆம்; சரியாக மூன்று வருஷத்துக்கு முன்னால், 1941-ம் வருஷம் ஜூன் மீ 22உ, ஹிட்லருடைய ராட்சஸப் படைகள் ருஷியாவின் மீது படையெடுத்தன.

கிறான். ஆபத்து வரும்போது கலங்க மாட்டான்'' என்றது மூத்தக் குஞ்சு.

''நீ தீரன், மேதாவி. பலரில் ஒருவன் தான் உன்னைப்போலத் தைரியமாக இருப்பான்'' என்றது தம்பிக் குஞ்சுகள்.

சிரித்த முகத்துடன் அக்கினியை எல்லாம் துதி செய்தன.

''அக்கினியே! எங்களுடைய தாய் போய்விட்டாள். தந்தை எங்களுக்குத் தெரியாது. நாங்கள் முட்டையை விட்டு வெளி வந்த பின் அவரைக் காணவில்லை. புகையைத் துவஜமாகக் கொண்ட தெய்வமே! இன்னும் சிறகு முளைக்காத பறவைக் குஞ்சுகளாகிய எங்களுக்கு நீயே கதி. வேறு ஆதரவு யாரும் இல்லை. எங்களை ரக்ஷிப்பாயாக! உன்னைச் சரண் புகுந்தோம்'' என்று அக்கினியைப் பிரார்த்தித்துத் துதி செய்தன.

மரத்தில் பற்றிய தீயானது பறவைக் குஞ்சுகளைத் தீண்டவில்லை. காட்டை எல்லாம் தாவி நிர்மூலம் செய்துவிட்டு அணைந்தது.

தீ அணைந்த பிறகு தாய்ப் பறவை அவ்விடம் வந்து குஞ்சுகள் க்ஷேமமாக பேசிக் கொண்டிருக்கிற அற்புதத்தைக் கண்டது. அவற்றை ஒவ்வொன்றாகத் தழுவி முத்தமிட்டு மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்தது.

* * *

ஆண் பறவையான தன் புது மனைவி லபிதையிடம், ''ஐயோ! என் குஞ்சுகள் தீக்கு இரையாயிருக்குமே!'' என்று வருத்தப்பட்டு அடிக்கடி அலறிக் கொண்டிருந்தது. அதற்கு லபிதை என்கிற அந்தப் பெண் பறவை, ''அப்படியா? உம்முடைய சமாசாரம் எனக்கு நன்றாகத் தெரியும். நீர்தான் முந்தியே சொல்லியிருக்கிறீர். ஜரிதையின் குஞ்சுகளை அக்கினி எரிக்காது என்றும் உமக்கு அக்கினி தேவன் வரம் தந்திருக்கிறான் என்றும் சொன்னீரல்லவா? இப்போது ஜரிதையிடம் போக வேண்டும் என்று உமக்கு ஆசை போலிருக்கிறது. என்மேல் வெறுப்பு உண்டாகி இருக்கிறது. பொய்யாக ஏன் நெருப்பையும் குஞ்சுகளையும் காரணமாகச் சொல்லுகிறீர்? என்னை விட்டுவிட்டு உமக்கு அன்பான ஜரிதையிடம் போக வேண்டுமானால் உண்மையைச் சொல்லிப் போகலாமே! சம்பத்தகாத கெட்ட புருஷனை அடைந்து ஏமாற்றப்பட்ட பெண்களில் நானும் ஒருத்தியாகக் காட்டில் சஞ்சரிப்பேன். நீர் போகலாம்'' என்றது.

''நீ எண்ணுவது சரியல்ல'' என்றது மந்தபாலப் பறவை. ''நான் புத்திர சந்தானத்திற்காகத்தான் பறவைப் பிறப்பு எடுத்தேன். குஞ்சுகளைப் பற்றித்தான் எனக்குக் கவலை. போய்ப் பார்த்து வருகிறேன்'' என்று புது மனைவிக்குச் சமாதானம் சொல்லி ஜரிதை இருந்த மரத்தண்டை சென்றார்.

ஜரிதை புருஷன் வந்ததைக் கவனிக்கவே இல்லை. குஞ்சுகளை உயிருடன் அடைந்த சந்தோஷத்திலேயே முழுகியிருந்தது. பிறகு ஜரிதை புருஷனைப் பார்த்து, ''ஏன் வந்தீர்?'' என்று அசிரத்தையாகக் கேட்டது.

''என் குஞ்சுகள் சுகமா? இவற்றில் எது மூத்த புத்திரன்?'' என்று மந்தபாலர் பக்கத்தில் வந்து அன்பாகக் கேட்டார்.

அப்போது ஜரிதை, ''யார் ஜேஷ்டனானால் அவனால் உமக்கு ஆவது என்ன, இளையவனால் ஆவது என்ன? ஒரு துணையுமில்லாமல் என்னை விட்டுவிட்டு எவளைத் தொடர்ந்து சென்றீரோ அவளிடத்தில் போய்ச் சேரும். சுகமாக அவளிடம் இருக்கலாம்'' என்றது.

''புத்திரர்களைப் பெற்ற ஸ்திரீ புருஷனை லட்சியம் செய்யாள். இது உலக சுபாவம். ஒரு குற்றமும் அறியாத வசிஷ்டரைக்கூட அருந்ததி இவ்வாறுதான் உதாசீனம் செய்தாள்'' என்றார் மந்தபாலர்.



எனக்குச் சக்தியில்லையே!" என்றிவ்வாறு பரிதபித்துக் கொண்டிருக்கிற தாயைப் பார்த்துக் குஞ்சுகள் சொல்லின :

"தாயே! எங்கள்மேலுள்ள அன்பினால் பரிதபிக்காதே. நாங்கள் இங்கே இறந்து போனாலும் அதனால் ஒன்றும் குறைவில்லை ; நல்ல பதவியை அடைவோம். நீ எங்களுக்காக இறந்தால் குலம் விருத்தியடையாமல் போகும். நீ அக்கினியில்லாத வேறு இடத்துக்குப் போய் க்ஷேமமாக இரு. நாங்கள் இங்கே தீக்கு இரையானாலும் உனக்குப் பிள்ளைகள் உண்டாகும். அம்மா! நீ ஆராய்ந்து குலத்துக்கு எது க்ஷேமம் அதிகமோ அதைச் செய்."



தாய்க்குக் குஞ்சுகளை விட்டுப் போக மனம் வரவில்லை. "இங்கேயே உங்களுடன் நானும் தீக்கு இரையாவேன்" என்று இருந்தது.

* * *

மந்தபாலர் என்கிற ஒரு ரிஷி ஒழுக்கம் தவறாமல் பிரமசரிய விரதத்தைக் காப்பாற்றி இறந்தார். அவர் மேலுலகம் சென்றபோது புத்திர சந்தானம் உண்டாக்காமல் வந்தவர்களுக்கு இங்கே இடமில்லை என்று திருப்பி அனுப்பப்பட்டார். அதன் மேல் அவர் சாரங்கப் பட்சியாகப் பிறந்து ஜரிதை என்கிற பெண் பறவையுடன் கூடினார். அது நான்கு முட்டைகள் இட்டவுடன் அவர் ஜரிதையை விட்டு விட்டு லபிதை என்ற மற்றொரு பெண் சாரங்கப் பறவையுடன் சேர்ந்தார்.

ஜரிதையின் நான்கு முட்டைகளும் பொரித்து குஞ்சுகளாயின. ரிஷிக்குப் பிறந்த குஞ்சுகளானபடியால் இவ்வாறு தாய்க்குத் தைரியத்தை உபதேசித்தன.

* * *

தாய்ப் பறவை குஞ்சுகளுக்குச் சொல்லிற்று : "இந்த மரத்துக்குப் பக்கத்தில் ஒரு எலிப்பாழி இருக்கிறது. அந்த வளை வாயிலுக்குள் உங்களை விடுகிறேன். நீங்கள் மெள்ள உள்ளே நுழைந்து போய்ப் பதுங்கி இருங்கள். நெருப்புப் படாமல் க்ஷேமமாக இருக்கலாம். வளையின் வாயை நான் மண்ணைப் போட்டு மூடி விடுகிறேன். அனல் உங்களை எட்டாது. இந்தக் காட்டுத்தீ அணைந்ததும் நான் வந்து மண்ணை எடுத்துத் தள்ளி உங்களை உயிருடன் விடுவிப்பேன்" என்றது தாய்ப் பறவை.

தாய் சொன்னதைக் குஞ்சுகள் ஒப்பவில்லை. "வளைக்குள் இருக்கும் எலி எங்களைத் தின்று விடும். நெருப்பில் சாவதுமேலானது. எலியால் தின்னப்பட்ட இழிவான முடிவு எங்களுக்கு வேண்டாம்" என்றன.

"இந்த வளையிலிருந்த எலியைப் பருந்து ஒன்று தூக்கிப் போனதை நான் பார்த்தேன். வளையில் உங்களுக்கு அபாயம் இல்லை" என்று தாய்ப்பறவை சொல்லிற்று.

ஆயினும் குஞ்சுகள் ஒப்பவில்லை. "வேறு எலிகள் வளையில் கட்டாயம் இருக்கும். ஒரு எலி மட்டும் பருந்துக்கு இரையாகி விட்டதனால் அபாயம் தீர்ந்து விடவில்லை. நீ உயிரைக் காப்பாற்றிக் கொள். நெருப்பு வேகமாக வந்து கொண்டிருக்கிறது. இந்த மரத்தைச் சுற்றிக் கொள்ளுவதற்குமுன் நீ பறந்து போ. வளைக்குள் நுழைந்து பதுங்க எங்களால் முடியாது. எங்களுக்காக வருந்தி நீயும் ஏன் உயிரை விடுகிறாய்? நீ யார்? நாங்கள் யார்? நாங்கள் உனக்கு என்ன உதவி செய்தோம், ஒன்றுமில்லை. நாங்கள் பிறந்து உனக்குக் கஷ்டம்தான் கொடுத்தோம். நீ எங்களை விட்டுவிடு. நீ சிறு பெண்ணாக இருக்கிறாய். நீ பர்த்தாவை அடைந்து க்ஷேமமாக இரு. நாங்கள் அக்கினியில் எரிக்கப்பட்டு இறந்தால் நல்ல உலகங்களை அடைவோம். உயிருடன் தப்பினால் நெருப்பு அணைந்த பிறகு நீ வந்து எங்களைப் பார்க்கலாம். நீ உடனே போய் விடு" என்று குஞ்சுகள் வற்புறுத்தத் தாய்ப் பறவை பறந்து போயிற்று.

* * *

தீயானது மரத்தைப் பற்றிற்று. பறவைக் குஞ்சுகள் மனம் கலங்காமல் ஆபத்தை எதிர்பார்த்துக் கொண்டு ஒன்றோடொன்று சம்பாஷணை செய்து கொண்டிருந்தன.

"அறிவுள்ளவன் கஷ்டகாலம் வரும்போது முந்தியே தெரிந்து கொண்டு மனதை ஸ்திரப்படுத்திக் கொள்ளு

# வியாசர் விருந்து

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## சாரங்கக் குஞ்சுகள்

புராணக் கதைகளில் பறவைகளும் மிருகங்களும் மனிதர்களைப் போல் பேசும். உலக நீதியும் வேதாந்தமும் கூட உபதேசிக்கும். இதனுடன் ஆங்காங்கு அந்தப் பிராணிகளின் இயற்கைக் குணங்களும் கதவுக்குள்ளிருந்து எட்டிப் பார்ப்பதுபோல் தோற்றம் காட்டவும் செய்யும்.

இயற்கையும் கற்பனையும் இவ்வாறு கலந்து நிற்பது புராண இலக்கியத்தின் தனியழகு. மகா புத்திசாலியாகவும் நீதி நிபுணனாகவும் வருணிக்கப்பட்ட அனுமான் இராவணனுடைய அந்தப்புரத்தில் ஒரு அழகிய ஸ்திரீயைக் கண்டு அவள்தான் சீதை என்று எண்ணிக்கொண்டு குரங்கைப் போல் குதித்துக் கூத்தாடியது இராமாயணம் படிப்போரெல்லாம் அனுபவிக்கும் ஒரு கட்டம்.

பட்சிகளும் பசுக்களும் பேசும் கதைகள் குழந்தைகளுக்குச் சொல்லுவது சகஜம். ஆனால் முதிர்ந்தவர்களுக்குச் சொல்லப்படும் புராணக் கதைகளில் இவ்வாறான சம்பாஷணைகளுக்கு உண்மைத் தோற்றம் தருவதற்காக ஏதேனும் சப்பை கட்ட வேண்டியதாகும். அதற்காகக் கையாளப்படும் முறை ஒன்று உண்டு. கதையில் வரும் பிராணிகளுக்கு ஒரு பூர்வ ஜன்ம விருத்தாந்தம் ஆக்கித் தந்து விடுவது புராண இலக்கிய முறை. ஒரு ரிஷி மானாகப் பிறந்தார் என்றாவது ஒரு அரசன் சாபத்தால் நரியாக ஜன்மம் எடுத்தான் என்றாவது கதையைச் சொல்லுவது வழக்கம். அப்போது மான், மான் போலும் நடந்து கொள்ளும்; ரிஷி போலும் பேசும். நரி நரியாக இருந்தாலும் அனுபவம் பெற்ற அரசனாகவும் கூடவே காட்டிக்கொள்ளும். கதையும் ருசிக்கும். அதன் மூலம் உண்மைகளும் புகட்டப்படும்.

* * *

பாண்டவர்கள் காண்டவ பிரஸ்தத்தில் குடியேறி, பாழாகக் கிடந்த இடத்தைப் புதுப்பித்து நகரங்களும் கிராமங்களும் உண்டாக்கினார்கள். அக்காலத்தில், புதரும் முள்ளுமாக ஒரு பயங்கர வனம் இருந்தது. அதற்கு முன் அது ஒரு பெரிய நகரமாக இருந்ததாம். பாண்டவர்கள் அதை அடைந்த போது ஒரே பயங்கரமான காடாக இருந்தது. பட்சிகளும் ஜந்துக்களும் அதைத் தங்கள் இருப்பிடமாகச் செய்து கொண்டிருந்தன. திருடர்களும் தீயவர்களும் அங்கே பதுங்கியிருந்து ஜனங்களை இம்சித்துக்கொண்டிருந்தார்கள். இந்தக் காட்டைத் தீ வைத்துக் கொளுத்தி விட்டு இந்த இடத்தில் புது நகரம் கட்டி வைப்பதாக கிருஷ்ணனும் அருச்சுனனும் தீர்மானித்தார்கள்.

அந்த வனத்திலிருந்த ஒரு மரத்தில் ஒரு சாரங்கப் பறவை சிறகு முளைக்காத நான்கு குஞ்சுகளுடன் வாசம் செய்து வந்தது. குஞ்சுகளையும் தாய்ப் பறவையையும் விட்டு விட்டு ஆண் பறவை வேறொரு பெண் பறவையுடன் உல்லாசமாக வனத்தில் திரிந்துகொண்டிருந்தது. தாய்ப் பறவை மட்டும் குஞ்சுகளுக்காக இரை தேடிக்கொண்டு வந்து காப்பாற்றிக் கொண்டிருந்தது. அச்சமயத்தில் காட்டில் தீப் பற்றிக் கொண்டது. நெருப்பானது பரவிக் காட்டை எல்லாம் அழித்து எல்லாப் பிராணிகளையும் துன்புறுத்திற்று. இதைக் கண்டு துயருற்ற சாரங்கம் கண்ணீர் விட்டுப் புலம்பிற்று.

"உலகத்தை யெல்லாம் எரிக்கிற தீ நெருங்கி வந்து கொண்டிருக்கிறதே! பயங்கரமான அனல் வரவர அதிகமாகிறதே! இன்னும் கொஞ்ச நேரத்தில் இங்கே வந்து நம்மை எரித்து விடுமே! மரங்கள் பேரோசையுடன் விழுகிறதைக் கண்டு காட்டுப் பிராணிகள் எல்லாம் கலங்குகின்றனவே! சிறகும் கால்களும் இல்லாத குஞ்சுகளே! தீக்கு நீங்கள் இரையாவீர்களே! நான் என்ன செய்வேன்? உங்கள் தகப்பன் நம்மை விட்டுப் போய்விட்டாரே! இந்தக் குஞ்சுகளைத் தூக்கிக் கொண்டு பறந்து போக




# கல்கி

மலர் 3 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் { இதழ் 37


# என்ன சேதி?

## கருப்புத் தோட்டத்திலே!

இந் நாட்டிலிருந்து எத்தனையோ ஆயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள பீஜித் தீவில், கரும்புத் தோட்டங்களில் நம்மவர்கள் படும் பாட்டைப் பற்றி, பாரதியார் பாடியிருக்கிறார்.

"கேட்டிருப்பாய் காற்றே! — துன்பக்
கேணியிலே எங்கள் பெண்கள்
அழுத சொல்
மீட்டும் உரையாயோ?"

என்று கதறியிருக்கிறார். பாரதியார் இவ்விதம் பாடி எத்தனையோ காலம் ஆகிவிட்டது. இன்னும் பீஜியிலுள்ள இந்திய சகோதரர்களின் துயரம் தீர்ந்தபாடாகத் தெரியவில்லை.

## அக்னியே ஸ்வாஹா!

பீஜியில் கரும்புப் பயிர் செய்கிறவர்கள் பெரும்பாலும் இந்தியர்கள். அவர்களுடைய கரும்பையெல்லாம் வாங்கிச் சர்க்கரையாக்கி ஏற்றுமதி செய்கிறவர்கள் ஒரு ஐரோப்பியக் கம்பெனியார். இந்தக் கம்பெனியார் என்ன விலை குறிப்பிடுகிறார்களோ அந்த விலைக்கே கரும்பை அவர்களுக்குக் கொடுத்தாக வேண்டும். யுத்தம் ஆரம்பித்த பிறகு உலகெங்கும் எல்லாப் பொருள்களின் விலையும் ஏகமாய் உயர்ந்திருக்கும், பீஜி கரும்பு விலை மட்டும் உயரவேயில்லையாம். கரும்பு பயிரிடும் குடியானவர்கள் எவ்வளவோ மன்றாடியும் பிரயோஜனமில்லாமற் போகவே, அவர்கள் முன்னதாகவே நோட்டீஸ் கொடுத்துவிட்டுச் சென்ற பசலியில் விளைந்த கரும்பையெல்லாம் தீ வைத்துக் கொளுத்தி விட்டார்களாம்.

## ருத்ரானந்தர் பணி

பீஜித் தீவிலுள்ள இந்தியர்களுக்குத் தொண்டு செய்வதற்காகச் சென்றிருக்கும் சுவாமி ருத்ரானந்தரின் உருவப் படத்தைச் சென்ற இதழ் "கல்கி" அட்டையில் வெளியிட்டிருந்தோம். உலக வாழ்க்கையைத் துறந்து பாரமார்த்திகத்தை மேற்கொண்ட இப் பெரியாரை மேற்கூறிய கரும்புத் தகராறிலே சம்பந்தப்படுத்தி, பீஜி சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொண்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. பின்னர், ஹைகோர்ட்டார் சுவாமிகளைக் குற்றமற்றவர் என்று கண்டு விடுதலை செய்து விட்டார்களாம். பீஜி சர்க்கார், சுவாமிகள் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கருதியதே அவருடைய தொண்டின் சிறப்புக்குத் தகுந்த அத்தாட்சியாகும். நமது செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த துறவி ஒருவர், பல்லாயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள கண்ணற்ற தீவில் வாழும் இந்திய சகோதரர்களுக்கு அத்தகைய அரிய திருப்பணி செய்து வருகிறார் என்பது நமக்கு அளவற்ற பூரிப்பை அளிக்கிறது.

## இன்னொருவர் சென்றார்!

பாரத நாட்டின் முது பெருங் கிழவர்கள் இந்தியா சுதந்திர மடைந்து பார்க்காமலே ஒவ்வொருவராய்க் காலஞ் சென்று கொண்டிருக்கிறார்கள்! கடைசியாக அவ்விதம் நம்மைப் பிரிந்து சென்றவர் ஸ்ரீ பி. ஸி. ராய் அவர்கள். தமக்கென வாழாமல் பிறர்க்கெனவே வாழ்ந்த இந்தியா தேசத்து மகான்களில் ஸ்ரீ பி. ஸி. ராயும் ஒருவர். இரசாயன ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டு இந்தியாவுக்கு விஞ்ஞான உலகில் புகழும் பெருமையும் அளித்தவர். இறந்தவர் மறுபடி பிறப்பது என்பது உண்மையானால், ஸ்ரீ பி. ஸி. ராய், ஸ்ரீ விஜயராகவாச்சாரியார், ஸ்ரீமதி கஸ்தூரிபாய் முதலியோர் மீண்டும் இந்தப் புண்ணிய பூமியில் வந்து பிறப்பார்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அவர்கள் அவ்விதம் மறு ஜனனம் எடுப்பதற்குள்ளாக இந் நாடு சுதந்திர நாடாக வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.




குழந்தைகளின் முகமலர்ச்சியே தாய்மார்களின் செல்வம். குழந்தைகளின் புன்முறுவலே தந்தையர்களின் பொக்கிஷம்!

---

குழந்தைகளுக்கு தழுதழுத்த மேனியும் முகமலர்ச்சியோடு புன்முறுவலையும் தருவதில் பெரீஸ் பிஸ்கட்ஸ் சிறந்த ஆகாரமென்று ஒவ்வொரு தாய் தந்தையர்களும் நம்புகிறார்கள்.

எப்பொழுதும் பெரீஸ் பிஸ்கட்டுகளையே விரும்புகிறார்கள்

ஆம்

# பெரீஸ் பிஸ்கட்ஸ்

குழந்தைகளைப் போஷித்து வளர்க்கும் ஆகாரம்

சிற்றுண்டிகளுக்கு சிறந்ததோர் உணவு.

PERRY & COMPANY, BISCUITS MANUFACTURERS, USILAMPATTI

# இந்தியத் தேயிலையில் மிகச் சிறந்தது



மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் தேயிலை பெண் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ் தேயிலை பெண்

நேர்த்தியான இந்திய தேயிலை

LTK 84 G

---

**ஆனந்தமாக லிப்டன் தேனீர் அருந்தும்போது பொறுப்பற்ற பேச்சுகளைப் பேசாதீர்கள்.**

# சாவியைப் பற்றி நாடோடி

"சாவியின் கதைகளிலும், கட்டுரைகளிலும் புதுப் புதுக் கருத்துக்களைக் காணலாம். மிகத் தெளிவாகச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல். தெள்ளிய நீரோட்டத்தைப்போல் சலசலவென்று வேகமாகச் செல்லும் நடை. அங்கங்கே ஆகாச வெடி போல் வெடிக்கும் ஹாஸ்யங்கள்......" என்று தமிழ் நாட்டின் சிறந்த ஹாஸ்ய எழுத்தாளர் நாடோடி சாவியைப் புகழ்கிறார். அவர் சொல்வது சரிதானு என்று சாவியின்

## மௌனப் பிள்ளையார்

என்னும் புதுப் புத்தகத்தை நீங்களே படித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்.

112 பக்கங்கள் : விலை ரூ. 1—12—0

ஏ. வி. குப்புசாமி அய்யர் & பிரதர்ஸ், 14, பரோடா தெரு, மாம்பலம், சென்னை

---

## கவிஞர் பாரதிதாசன்

இயற்றிய

இசை யமுது ரூ. 1-4-0
இருண்ட வீடு ரூ. 1-0-0

வெளி வந்து விட்டன!



அச்சில் :

கற்கண்டு, தமிழச்சியின் கத்தி



பாரதிதாசன் இயற்றிய நூல்கள் அனைத்தும் எங்களிடம் கிடைக்கும்



## முத்தமிழ் நிலையம்

கோனாபட்டு, புதுக்கோட்டைத் தபால் வழியாக

---

நீளமான அழகிய ஆரோக்யமான கருங் கூந்தல் வளர

## கூந்தல் விர்த்தினி




109, தங்கசாலைத் தெரு, மதராஸ்.

ஒவ்வொரு பாட்டிலுடன் ஒரு அழகிய பல வர்ணக் கலர் டிப்பி இருஞ்ஸன் படம் இனமாக அளிக்கப்படும்.

மதராஸ் விற்பனை ஏஜண்டுகள் :

மெஸர்ஸ். சாயிராம் & கம்பெனி
பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி.

---

சொறி, சிரங்கு, படை முதலிய சர்மவியாதிகளுக்கு-

## மாடர்ன் சாண்டல் ஆயிண்ட்மெண்ட்



சோல் ஏஜன்ட் : P. G. S. வாசன்,
34, பந்தர் தெரு :: சென்னை.

# உங்களுக்கு எது வேண்டும்?



உணவு,



துணி மணிகள்,



விறகு வேண்டுமா?




அல்லது ரயில் பிரயாணமா?

இரண்டும் கிடைக்காது. இந்திய பூராவுக்கும் தேவையான பொருள்களை தங்கு தடையின்றி ஏற்றிவர ரயில்வேக்கள் உத்திரவாதமளிக்க முடியாது; கூடவே கணக்கற்ற பிரயாணிகளுக்கு இடவசதியளிப்பதும் சாத்தியமில்லை. போதுமான என்ஜின்கள், வண்டிகள், வாகின்கள் இல்லை.

இந்த நிலைமையில் ரயில்வேயின் கடமை என்ன என்பதில் சந்தேகமே வேண்டாம். உணவுப் பொருள், துணிமணிகள், விறகு இவற்றிற்குத்தான் முதற் சலுகை. அவை மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை. அவைகளில்லாவிட்டால் மக்கள் மடியவேண்டியதுதான்.

ஆகையால்தான் பிரயாணி வண்டிகளில் இவ்வளவு கூட்டம் நெருக்கடி. அதுவே சார்ஜுகள் அதிகரிப்புக்கும் காரணம். ஆகையால் நீங்கள் வீட்டைவிட்டு வெளியூருக்குக் கிளம்பக்கூடாது. அப்படி இருந்தால்தான் உங்களுக்கு வேண்டிய பொருள்களை கஷ்டமின்றிப்பெற வசதி பெறப்படும்.

## பிரயாணத்தைக் குறையுங்கள்.

காந்திஜிக்கும் வைஸ்ராய்க்கும் நடந்த கடிதப் போக்குவரவு வெளியாகியிருக்கிறது.
அதிலிருந்து தெளிவாகியிருக்கும் அரசியல் நிலைமை இதுதான்.





காங்கிரஸ் கட்சி

சர்க்கார் கட்சி

இந்தக் கோடைகால முடிவுக்குள் யுத்தமும் முடிந்துவிடும்
என்று சர்ச்சில் கூறுகிறார்.

நாஜி ஜெர்மனி

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 3 | இதழ் 37 — 1944 ஜூன் 25 — தாரண ௵ ஆனி 12




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.




ஒரு கணம் கண்ணை மூடிக் கொள்ளுங்கள்: பிரான்ஸ் தேசத்தில் நார்மண்டி கடற்கரை போரத்துக் காட்சியைக் கற்பனை செய்து கொண்டு பாருங்கள். பிறகு, கண்ணைத் திறந்து, இந்த இதழின் அட்டைப் படத்தையும் பாருங்கள். அந்தக் கோரக் காட்சிக்கும் இந்த இதழில் காணும் சாந்தி நிலவும் காட்சிக்கும் எவ்வளவு வித்தியாசம்! ஹைதர் அலி, திப்புசுல்தான் போன்ற முகமதிய அரசர்கள் அரசு புரிந்த மைசூரில் சாரதா தேவியின் புராதனத் திருக்கோவில் கம்பீரமாக இன்னும் தலை நிமிர்ந்து நிற்கிறது. பாரத பூமியின் பாரமார்த்திகப் பண்பாட்டுக்குச் சின்னமாக விளங்குவதோடு, இந்தத் தேசத்தில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் வேற்றுமையின்றிச் சகோதரர்களைப் போல் வாழ்வது சாத்தியம் என்பதையும் அறிவுறுத்திக் கொண்டு இந்தக் கோவிலின் கோபுரம் ஓங்கி வளர்ந்து நிற்கிறது.



புதிய
# "எச். எம். வி."
ரிகார்டுகள்



## ஸ்ரீமதி என். ஸி. வஸந்தகோகிலம்

N. 18229 { ஆர்வத் தீயால் — விருத்தம்
ராகமாலிகை 2 பாகங்கள்
(ஸ்வாமி சுத்தானந்த பாரதி)



## திரு. எம். எம். தண்டபாணி தேசிகர்

N. 18228 { கோயிலும் ஸ்வாமியும்
2 பாகங்கள்
(ஸ்வாமி சுத்தானந்த பாரதி)



## ஸ்ரீமதி டி. ஏ. மதுரம்

N. 18230
கலைவாணியாரின்
'பர்த்ருஹரி'யிலிருந்து
காக்கா கண்ணி
★
பாட்டெ கேக்கோணும்



எல்லா "எச். எம். வி." வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

நீண்டகாலம் உபயோகிக்கக் கூடிய "எச். எம். வி,"



ஹைபிடெலிடி ஊசிகள்
ஒரு ஊசியினால் பல ரிகார்டுகளைப் பாட வைக்கலாம். 10 ஊசிகள் அடங்கிய பாக்கெட் 1-க்கு ரூ. 1/8




M. D. B. V. S. சபா

நவாப்

## T. S. ராஜமாணிக்கம் கம்பெனி

*10—6—44 தேதியன்று*

அன்னதான வைபவத்துடன் ஆரம்பிக்கப்பட்ட

# ★ சக்தி லீலா ★

நாடகம்

## திருவனந்தபுரம் சித்ரா தியேட்டரில்

வெற்றிகரமாக பிரதி தினமும் நடைபெற்று வருகிறது

---

# கருட கர்வ பங்கம்

தெலுங்கு

கக்கையர், பானுமதி

நடித்தது

பாரதி பிலிம்ஸாரின் வெளியீடு



சென்னை

## வெலிங்டனில்

*1-7-44 ஆரம்ப விழா*

N. P. B. S. I.



# இரு இலையும் ஒரு மொட்டும் . . .

'இரு இலையும் ஒரு மொட்டு'மாகப் பறிப்பதுதான் உயர்ந்த ரகமான தேயிலையைப் பறிக்கும் சரியான முறை. இப்படிச் செய்வதனால், இளம் கொழுந்தான தளிர்கள்தான் பறிக்கப் படுகின்றன என்ற நிச்சயம் ஏற்படுகிறது.

ப்ரூக் பாண்ட் கையாளும் முறைப்படி விற்பனைச் சிப்பந்திகளால் வியாபாரிகளுக்குப் புத்தப் புதிதான சரக்குகள் அடிக்கடி வினியோகிக்கப்படுகின்றன. 'இரு இலை ஒரு மொட்டு' அதன் உன்னதமான மணத்தோடே உங்களிடம் வந்து சேர்வதற்கு இந்த முறைதான் காரணம்.

இந்தியாவின் முக்கியமான இடங்களிலெல்லாம் உள்ள டெபோக்களிலிருந்து எங்கள் விற்பனைச் சிப்பந்திகளால் தேயிலை சதா எடுத்துக்கொண்டு போகப்படுகின்றன. டெப்போவில் காலி ஆக ஆக அந்த இடத்தைத் தொழில் ஆலைகளிலிருந்து கொண்டு வரப்பட்ட தேயிலை நிரப்புகிறது.

பூரணமான மணத்தோடு கூடின புத்தப் புதிதான குணம், திருப்தி யளிக்குந்தன்மை, இவற்றை ரஸிக்க விரும்புபவர்களுக்கு ''டார்ஜிலிங் ப்ளெண்ட்''தான் சரியான தேயிலை.




# ப்ரூக் பாண்ட்

# கொலம்பியா ரிகார்டுகளில்

ப்ரகதி

# ஹரிச்சந்திரா (தமிழ்)

டாக்கீ பாட்டுகள்

## B.S.ராஜா அய்யங்கார் & ஆகாசவாணி பாட்டு

GE.6140 { சாந்தமே
விதியின்செயல்

## டான்ஸ் பாட்டு
## லோகிதாசன் பாட்டு



GE.6139 { காமதேவனின்
மனமகிழ்வோடு

## M.V.சுப்பையா நாயுடு & லக்ஷ்மி பாய்

பாடிய



GE.6127 { மானிடவாழ்க்கையே
சதாசிவா

## ஸரஸ்வதி ஸ்டோரஸ், மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும் :

முகமது இப்ராஹிம் & கம்பெனி, சென்னை. S. கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி.
V. S. ராஜகோபாலன் கம்பெனி, சென்னை, பங்களூர், சேலம், கோயமுத்தூர்.